பன்னிரு புலவர் சரித்திர ஸாரம்.



# BRIEF BIOGRAPHIES

# TWELVE STANDARD TAMIL POETS,

TOGETHER WITH

## AN ESSAY ON

## (முத்தமிழ் & நவரஸம்)

**The Three Principal Divisions of Tamil Literature and Poetical Sentiments**

BY

DEWAN BAHADUR V. KRISHNAMA CHARIAR,

*Chairman of the Board of Studies in the Dravidian Languages in the University of Madras.*

PUBLISHED MAINLY FOR THE USE OF EXAMINATION CANDIDATES.

MADRAS.

1906.

**TO THE MEMORY**

OF

MY SCHOOL MASTER

EYRE BURTON POWELL, ESQ., C.S.I.

**This Compilation**

IS

*DEDICATED WITH VENERATION AND GRATITUDE.*

---

I also Dedicate my new Essay
on the Three Principal Divisions of
Tamil Literature and Poetic Sentiments

TO

THE MEMORY OF MISS E. A. MANNING,

**An Esteemed English Friend of my Family**

As a Small Tribute offered over the Grave
in the Far West of One,
Whose arduous labours in the great cause of
Female Education in the East have won for her
the Admiration and Gratitude
of all India.

# PREFACE.

In presenting this collection of Biographical sketches in Tamil Prose of a select number of old-time poets, it will be useful to state that this little volume is only an attempt to impress on the student some ideas of the lives and writings of different typical poets of the Tamil land and the matter and manner of their compositions. Every effort has been made to render the sketches readable and accurate and helpful to candidates preparing for the High proficiency and Honors Tests of the Board of Examiners for the Public Service, and for the University Examinations in Madras.

Due care has been taken in the selection of leading facts and materials for an Essay on poetic Tamil and poetical sentiments for general use, and valuable suggestions have been secured from Pandits V. Swaminatha Iyer, T. Chelvakesavaraya Mudaliar, M.A. and T. Venkata Ramiengar in the choice of illustrative passages added to each poet's biography.

The Compiler is well aware that this little volume contains hardly anything new; but it is just the book which those who consult its pages will feel free to criticise, and the chances are that he may be "hoist with his own petard." If, unfortunately, this should be the case, he hopes that he may be informed of any mistakes that have escaped his notice, and the same shall be corrected in a future edition.

MADRAS,<br>
*December* 1905

# CONTENTS.

# விஷய அட்டவணை.



| விஷயம். | | பக்கம். |
|---|---|---|

# திருவள்ளுவர் பாடிய

## கடவுள் வாழ்த்து.

முதற்குறள்.

1. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

பீடிகை.

இதில் சகல உலகங்களுக்கும் ஆதியான பொருள் உண்டென்று காட்டப்பட்டது.

பொருள்.

எல்லா எழுத்துக்களும் அகரத்தைத் தமக்கு முதலாக உடையன; அதுபோல எல்லா உலகங்களும் ஆதியாகிய பரம்பொருளை முதலாகவுடைய தென்பதாம்.

உத்தரவேதமாம் குறளைப் பாடத் துவக்குமுன் பாடல் ரூபமாகிய அவ்வேதம் யாதொரு தடையுமின்றி நிறைவேறற்பொருட்டுத் திருவள்ளுவர் பாடிய கடவுள் வாழ்த்தாம் குறள்களில் இது முதலாவது.

இக்கடவுள் வாழ்த்து அவ்வேதத்தை யாதொரு தடையுமின்றி நிறைவேற்றியதுமன்றி அதனைச் சங்கமேற்றுவித்து உலகமெங்கும் வேதமாக வழங்கும்படியாயும் செய்வித்தது. இக்கடவுள் வாழ்த்தொன்றுமே திருவள்ளுவரின் சிறப்பை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்குகின்றது.

தொழில்களாலும் குணத்தாலும் பரம்பொருள் வேறுபடினும் எவ்வகைப் பொருள்களையும் ஒரு தன்மையாய் நின்று ஆளுந்தன்மைபோல அகரமெனுங் குற்றெழுத்து மற்றைய எல்லா வெழுத்திற்கு மாதியாயுங் காரணமாயும் நிற்கின்றது. அகரம் தமிழ்ப்பாஷைக்கு மாத்திரமன்றி, வடமொழி முதலிய வேறு பாஷைக்கும் முதலாய் நிற்கின்றது. உலகமென்பது இங்கு ஜாதியொருமையாய்ப் பலவுலகங்களையும் உணர்த்துகின்றது. எல்லாம் என்பதை எழுத்தோடும் உலகத்தோடும் சேர்த்துப் பொருள் கொள்க. இது ஒருமொழியை இரண்டிடத்துஞ் சேர்த்துத் தமிழர் பொருள் கொள்வதுண்டென்பதைக் காட்டுகின்றது.

இதனால் பல வுலகங்கள் சேர்ந்த அண்டமும் அப்பல அண்டங்கள் சேர்ந்த பிரமாண்டமும் விளங்குதல் காட்டப்பட்டது. இக்கருத்து திருவாய்மொழியிற் கூறப்பட்டுள்ளது. அக்கவி வருமாறு :—

விண்மீ திருப்பாய் மலைமேல் நிற்பாய் கடல்சேர்வாய்
மண்மீ தழல்வா யிவற்று ளெங்கும் மறைந்துறைவாய்
எண்மீ தியன்ற புறவண் டத்தாய் யெனதாவி
யுண்மீ தாடி யுருக்காட் டாதே யொளிப்பாயோ.

இக்குறளில் மற்றோர் விசேஷப் பொருட்காட்சியுமுண்டு. உலகம் என்பது உயர்ந்தோரை யுணர்த்து மொழியாதலின் அது இங்கு ஔவை திருவள்ளுவர் கபிலர் உள்ளிட்ட எழுவரை யுணர்த்தி அவர்களுக்குக் காரணராய் நின்றோர் ஆதியும் பகவனுமாவரெனும் பொருள் தருதலுங் காண்க. ஆதியென்பாள்-தாய், பகவனென்பான்-தகப்பன். ஆதிபகவனென்பது முதற் கடவுளை யுணர்த்தியதோடு நூல்செய்தார் தாய்தந்தையரையு முணர்த்தி நிற்பது ஆச்சரியமே.

மற்றோர் நயம், அதாவது அகரம் பிறக்கும் எல்லா எழுத்திற்கும் முதற்காரணமாய் நிற்றல்.

அகரமுதிப்பதோ வாய்திறப்பதாலாம். எவ்வெழுத்தும் வாய்திறந்தே யுச்சரிக்கப்படுதலால் அகரத்தின் தோற்றுவாய்கொண்டே மற்றைய வெழுத்துக்கள் தோன்றுதலேயாம். இந்நயங் கருதியே "அகரமுதல வெழுத்தெல்லாம்" எனப்பட்டது.

---

## EDITOR'S NOTE.

The following translation and notes of Mr. F.W. Ellis (Madras Civil Service), an oriental scholar of extra ordinary ability, are here reproduced that the moral sentiments conveyed and their loftiness of aim may be rightly understood by European and other foreign students. The English annotations and illustrative passages quoted by Mr. Ellis which are extracted here from his Kural of Tiruvalluvar, and inserted in other parts of this Compilation are recommended for study as they will be found helpful to all Examination candidates and other reading men that seek some acquaintance with the higher dialect and the Ethical and Social Philosophy of the Tamil people who glory in the possession of this book of Epigrammatic masterpieces of a Tamil moralist.

---

*The Praise of God.*

The literal meaning of this title is preserved in the translation. According to established rule all

Tamil composition ought to begin, and with few exceptions, all do commence with an invo-cation of the Deity varying according to the sect of the writer. Tiruvalluvar has devoted the whole of this 1st chapter to this subject. As regards the Its Stanza he writes:—

*As ranked in every alphabet the first*
*The self-same vowel stands, so in all worlds,*
*The eternal God is chief.*

Literally as A is the first letter Ee: the first of our vowels when pronounced short, is here, intended, which is actually the first letter in all alphabets and the meaning of the distich, therefore, is, that as this letter, however varying in form, is the first in all alphabets, so the same Deity, however varying in his energies and attributes, governs all nature. By translating the word எழுத்து '*letter*' instead of "alphabet", the sense of this couplet would be:— As the vowel A stands first among the letters (of the Tamil alphabet) so the eternal God stands first in the world—and this, in fact, is the meaning given to it in the Latin commentary by Beschi.

The foregoing version, however, agrees with the reading of Parimelazhagar who commenting on it says 'தமிழெழுத்திற்கேயன்றி......தெல்லாமென்றார்' It is not confined to the Tamil alphabet alone; seeing it to be the first, also in the Northern (or Sanskrit) Alphabet he says all alphabets. It must not be objected to this that உலகு the world is in the singular number,

as this word like many similar terms in Tamil, has frequently a plural and general signification as in the 3rd couplet of chap. 3, where it means the inhabitants both of heaven and earth. Here moreover, generality may more especially be attributed to it, the adjective எல்லாம் '*all*' being so placed in the sentence as to qualify both எழுத்து '*letters*' and உலகு '*worlds*'; thus affording two readings, namely அகரமுதலவெழுத்தெல்லாம் and எல்லாமாதிபகவன்முதற்றேயுலகு. (The eternal God is the chief in all worlds): Instances of such double application of a single term are not uncommon in Tamil.

So in all worlds—the Hindus believe not only in a plurality of worlds but in a plurality of systems called அண்டம் of which the entire collection constitutes the பிரமாண்டம் 'the universe'. This belief is thus alluded to in திருவாய்மொழி (see the verse quoted above) which means—

Thou art in the heavens, thou art above the mountains, thou dwellest in the ocean. Thou revolvest in the earth, but among all these, though everywhere present, thou art everywhere hid. Thou art among other worlds, among systems beyond the reach of thought. And thou sportest, also, in my soul, wilt thou ever thus remain concealed without manifesting thy form?

---

2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

பீடிகை.

மாந்தர்க்குக் கல்வியின்பயன் இன்னதென்பதைக் காட்டுகின்றது.

பொருள்.

ஒருவர் சகலகலைகளும் கற்றுவல்லவராயினும் மெய் யறிவுடையானது திருவடிகளை வணங்காராயின் அவர் கற்ற கல்வி பயனற்றதாம்.

பிறவிப்பிணிக்கு ஆதிபகவனது தாள் மருந்தாதலின் நற்றாள் எனப்பட்டது. அவன் றாளைப்பரவுவோரைப் பிறவித்துன்பஞ் சாராதென்பது கருத்து.

---

*What is the fruit that human knowledge gives,*
*If at the feet of him, who is pure knowledge,*
*Due reverence be not paid?*

This version is nearly literal and requires no explanation. The term here used to designate the Deity வாலறிவன் *he who is pure intelligence* has immediate reference to ஆதிபகவன் in the preceding distich, as have all similar phrases throughout this chapter.

"If at his feet"——In this and other following couplets the words, *the worshippers of his feet*, to express reverence, and *those who are united to his feet*, to express obedience, are used in the original; such use probably originated in the practice of

substituting in the act of worship a material image for the immaterial idea. The sacred writers, however, do not reject similar phrases and they are no doubt employed by Tiruvalluvar in a figurative sense as the being he addresses in this chapter is evidently the Eternal one, "*to whom there is none similar*"; whom no symbol can express and no form design.

கற்றதனால் *from that which was learned*; the 3rd or instrumentive case of the neuter person original participle past of கற்றல் *to learn*——ஆய *which comes* the contracted participle of ஆதல் *to become* used for ஆகிற——பயன் *fruit, produce, profit* the nom. governing the substantive verb understood—என் what? the contracted form of the neuter interrogative pronoun என்னை——கொல் a particle, sometimes, as here, expletive, sometimes like ஓ implying doubtful interrogation—வால் purity, truth, here used adjectively and qualifying the following term——அறிவன் *he who is knowledge*, or *he who prossesses knowledge*; the former is the more general meaning of similar derivatives; thus வில்லவன் means *he who is a bowman*, not merely *the possessor of a bow*, and when conjugated வில்லேன், I am a bowman, வில்லாய் thou art a bowman &c., an appellative conjugated in the 3rd, Per. Mas. from அறிவு, knowledge, the nom. being used for the 6th, or genitive case——நற்றாடொழாஅர், for நல் good, தாள் a foot, the nom. used for the 2nd, or ac. case, and தொழார், the final being lengthened by உயிரளபெடை, *they who do not revere*; the negative participle in the masc. and fem. gender and plural number of தொழுதல் *to*

*revere*—எனின் *if said*, the subjunctive form of என்றல் to say; it has here, however, simply the sense of ஆனல் if and, united with the preceding negative term, means '*unless they revere*'.

---

3. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

பீடிகை.

அடிசேர்ந்தார் பெறும்பேறு இதிற்காட்டப்பட்டது.

பொருள்.

அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தில் அவர் நினைந்தவடிவோடு விரைந்து செல்வோனது மாட்சிமை தங்கிய அடிகளைச் சேருமவர், எல்லாவுலகிற்கும் மேலாகிய வீட்டுலகில் அழிவின்றி வாழ்வாரென்பது பொருள்.

பூமேல்நடந்தான் என்பதோர் பெயரைக்கொண்டு இக்குறள் பிறிதோர்கடவுளைச் சுட்டியதென்பாருமுளர்.

இங்கு சேர்தல் இடைவிடாது சிந்தித்தலையுணர்த்து கின்றது. இக்குறள் மூலபாடத்து மலர்மிசையேகினானென்று பொதுவாய்க் காட்டியதால் அதற்குரைவேண்டியதாயிற்று. முக்குடைநீழலில் அசோகமரத்தடியில் ஒருதாமரை மலரின்மேல் அருகக்கடவுள் நிற்கின்றாரென்பது ஜயினராம் சமணர்களின் கொள்கையாதலால் இக்குறளில் மலர்மிசை ஏகினானென்று கூறியிருத்தலைக்கொண்டு திருவள்ளுவரை யவர்கள் தமது சமயத்தவரென்கின்றார்கள்.

*They who adore His sacred feet, whose grace*
*Gladdens with sudden thrill the fervent heart,*
*High o'er the earth shall soar to endless joy.*

The allusion in the original could not by any form of words be preserved so as to be intelligible to the European reader; in this version, therefore, the commentary rather than the text, is followed. மலர் from மலர்தல் *to blow as a flower* means literally *a full blown flower*, and figuratively *a glad heart, a rejoicing mind*, thus தன்னுள்ளமலர்ந்தது *his mind or heart blew as a flower*, that is *rejoiced*, அவனுள்ளத்தை மலர்வித்தான் *he caused his heart to rejoice*. The original, accordingly, is மலர்மிசையேகினான் *he who passes suddenly over the full blown flower*, that is, *who passes suddenly over the rejoicing heart*, and it alludes to the sudden afflatus of the divine spirit into the mind of the favoured devotee, which purifies him from sin, detaches him from all mundane affections, and exempts him from the misery of future birth; to the effects of that grace, which "passeth all understanding," which at once converts unrighteousness into righteousness, and which is vouchsafed to the sinful Publican while it is withheld from the sinless Pharisee. The passage is thus interpreted by Parimél-azhagar அன்பா னினைவார துள்ளக்கமலத்தின்கணவர் நினைந்த வடிவொடு விரைந்து சேறலி னேகினான் which may be thus freely rendered, *he who passes suddenly over the lotos-flower of the heart of those who think on him with affection, appearing to their mind's eye in that form in which their several systems of religious belief lead their*

*imagination to represent him.* He adds இதனைப்பூமே னடந்தாரென்பதோர் பெயர்பற்றிப்பிறிதுகடவுட்கேற்று வாருமுளர். *They art some who apply this expression to another Deity, whom they denominated Pùmènadandár he walks on flowers:* those here referred to are the Samanèr or Jainer, who represent their twenty fourth Tírthacas, in Tamil jointly called Arugen from the Sanscrit *Arhah meritorious*, standing on a lotus flower beneath a Pindi or Asóca tree crowned by a triple umbrella. The Samanar claim Tiruvalluvar as belonging to their sect and adduce this verse in support of their claim.

"High o'er the earth"—the words of the original நிலமிசை may mean *on the earth* and the whole second line, therefore, may be rendered *they shall live long on the earth*; all the commentators, however, give it the meaning here assigned to it. The Latin translation is "in loco terræ superiori diu vivet——id est in cœlo æternum beabitur," and the paraphrase of Parimel-azhagar எல்லா வுலகிற்கு மேலாய' வீட்டுலகின்கணழிவின்றி வாழ்வார் *They shall live without decay in the world of final beautitude, above all worlds.* This interpretation of the term, மிசை *over, above* is certainly correct for it is only by a lapse from its proper meaning that it signifies *on.*

மலர் *A full blown flower*, the oblique in composition with the following terms: the oblique form of nouns ending in vowels, nasals and liquids, when they do not take the affix இன are the same as the nominative.—மிசை *height, elevation* as the latter

member of this and similar compounds this noun must be translated by the prepositions, *over*, *above*, sometimes *on*.——ஏகினன் *he who went*, *he who walked*; the third pers. masc. sing. of the past tense of ஏகுதல் *to go*, used as an aorist participle: to explain this use of the past tense Parimél-azhagar quotes the following rule from the Tolcápiyam.

> "வாராக்காலத்துநிகழுங்காலத்தும்
> ஓராங்குவரூஉம்வினைச்சொற்கிளவி
> யிறந்தகாலத்துக்குறிப்பொடுகிளத்தல்
> விரைந்தபொருளவென்மனார்புலவர்."

*The wise have declared that the verb may be used in the form of the past tense and with the signification of the present and future when quickness or suddenness is implied.* It will be found, however, that Tiruvalluvar frequently uses the past form in a sense entirely indefinite and when he does not intend to express the quick performance of the action.—மாண் *greatness*, *honor*, *glory*; used adjectively, or in composition with the following term.—அடி *a foot*, the nom. used for the ablative with the sense of the acc.—சேர்ந்தார் *they joined*, *united with*; the past tense third pers. masc. plu. used for the participle, or, as perhaps it ought rather to be considered, the contracted form of சேர்ந்தவர் the pronominal participle past of சேர்தல் *to join*.—நிலம் *the earth*; in composition with மிசை.—நீடு *length*, *extension of space*, *or duration of time*; used adverbially. The root நீள் *lengthen*, *extend*, gives origin to the two neuter verbs நீளல், formed immediately from it, and நீடுதல்,

formed from it by the affix து, which with the final ள் is converted to, டு, *to grow long or extend itself*, and to an active, நீட்டல் formed by doubling the final of the theme of the second neuter verb, *to stretch out, reach*: this theme நீடு is also, a noun subs. denominated by the Tamil Grammarians முதனிலைத்தொழிற்பெயர் *a verbal theme in the sense of a noun signifying the state or action of a verb*; such substantives may likewise be used as adjectives and adverbs.—வாழ்வார் *they shall live*; the third pers. plu. masc. of the fut. tense of வாழ்தல் *to live, flourish, enjoy happiness*, governed by the pronominal participle சேர்ந்தார்.

---

4. வேண்டுதல்வேண் டாமை யிலானடி
[சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

டிகை.

அடிசேர்ந்தார்க் கின்பமுடைமை காட்டப்பட்டது.

பொருள்.

ஒருபொருளை விரும்புதலும் விரும்பாமையு மில்லாத பரம்பொருளின் அடியைச் சேர்ந்தார்க்கு எக்காலத்தும் துன்பமில்லை யென்பது.

இக்கடவுள் வாழ்த்துள் 9-வது குறளில் ஆதி பகவற்குக் காட்டிய எண்குணங்களில் இவ்விரண்டு குணங்களடங்கி யிருத்தல் காண்க.

தன்னைப்பற்றியும் பிறவுயிரைப்பற்றியும் தெய்வத்தைப்பற்றியும் துன்பங்கள் மூவகையாய் வரும். தாபத்திரயமெ

ன்பது இதுவேயாம். அடிசேர்ந்தார்க்கு வேண்டுதல் வேண்டாமை யில்லையாதலால் இங்குக் காட்டிய மூவகைத் துன்பமும் அவரைச் சாராதென்பது கருத்து.

எச்சமயவழியாலேனும் அடிசேர்வார்க்கு மெய்யுணர்வுண்டாகித் தன்னால் வருந்துன்ப நீங்கிப் பிறரால்வருந் துன்பத்தைத் மேற்கொண்டு தெய்வத்தால் வருந்துன்பத்தையும் தடுக்கின்றதென்பது கருத்து.

---

*To him, whom no affection moves nor hate,*
*Those constant in obedience, from all ill*
*In this world and the next, are free.*

"Whom no affection moves nor hate"— this, though it conveys the general idea, is not an exact translation; வேண்டாமை may be more properly rendered *aversion* than hatred and the whole sentence, as explained by Parimelazhagar, ஒருபொருளையும் விழைதலும் வெறுத்தலு மில்லாதவன் *he who is not affected to any thing, nor averse from any thing*; or simply, *he who is without bias.* This expression வேண்டுதல் வேண்டாமை is intended to apply to the state ascribed by Hindu writers to the all-pervading Spirit, when they say it is the universal Witness, taking cognizance of all things, whether good or evil, but affected by none, and it describes in other words the fifth of the eight attributes admitted by the Agamas, as explained after the 9th verse of this chapter. The attribute indicated by the terms there used is the immateriality of the deity and they are so rendered ; the

more literal translation however, would be *that which cannot from its nature be affected by the incidents of matter.*

"From all ill in this world and the next is free"—Man is naturally liable to affliction according to the Hindus, from three sources namely from himself, from others, and from God. It is from religion alone, the author says, he can, derive that right knowledge which delivers him from the first, raises him above the second, and averts from him the third.—வேண்டுதல் *the possessing desire;* a verbal noun in the form by which the verb is usually expressed.—வேண்டாமை *the not possessing desire;* the negative verbal from வேண்டுதல் *to desire.*—இல்லான் for இல்லாதவன் *of him who has not,* the participle in the masculine singular from இல் *there is not,* the nominative being used for the genitive.—அடி the nom. used for the 2nd or acc: case, and governed by the following participle.—சேர்ந்தார்க்கு *to those united;* the past participle neuter of the verb சேர்தல் *to unite* in the 4th or dative case plural.—யாண்டும் *always;* யாண்டு as a noun, signifies *time,* but connected with the particle உம் it takes the adverbial signification here given to it. The foregoing word ending in உ and this beginning with ய a shortened இ-குற்றியலிகரம் is interposed, and the உ suffers elision.—

இடும்பை *mischief, evil, affliction,* the nom. of the following verb.—இல் *There is not;* this word like அல் *it is not* may be used for any tense or form of the verb which the sense requires.

*Note.*—The roots இல் and அல் do not give origin to any regular verb; they are confined to the negative form in which the former is thus conjugated.—இல்லேன் *I am not*, இல்லாய் *Thou art not*, இல்லான் *he is not*, இல்லாள் *she is not*, இன்று *it is not*, இல்லோம் *we are not*, இல்லீர் *ye are not*, இல்லார் masc. and fem. இல்ல neu, *they are not*; these forms may, also, be used as வினைக்குறிப்பு or conjugated appellatives, and they then mean *I who am not*, *thou who art not* etc. It has, also, the gerund இல்லா and இல்லாமல் *not being*, the subjunctive இன்றேல் *if not* the indef. participles இலா and இல்லாத *that which is not* and the verbal இல்லாமை *the not being*. அல் has nearly the same forms as இல்.

---

5. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

பிழை.

தெய்வத்தை வாழ்த்துவாரைத் துன்பமணுகாதென்

11 ...

பொருள்.

இறைவனது மெய்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து மயக்கம்பற்றியுண்டாம் நல்வினை தீவினை யெனுமிரண்டும் உண்டாகாவென்பது. செய்யத்தக்கது நல்வினை, செய்யத்தகாதது தீவினை. மண்ணுலகுவிண்ணுலகங்களின் தலைவன்றான் இறைவன். இறைவனது உண்மையிலை அல்லது சுபாவத்தைப்புகழ்வதே பொருள்சேர்புகழாம். புரிதலாவது எப்பொழுதுஞ்சொல்லுதல். இருள் என்பது

அவித்தை. அது அஞ்ஞானம் எனும் பொருள்கொண்டது. இன்னதன்மை யென்றுகூறப்படாததலால் இங்கேஅவித்தை இருளெனப்பட்டது. நல்வினையும் பிறத்தற்கேதுவாகலின் இருவினையெனப்பட்டது. இறைவன்குணங்களில்லாரை உடையவரெனவெண்ணி அறிவிலார்புகழும் புகழ்ச்சியிற் பொருள்சேராதாகலின் குணங்கள் முற்றுமுடைய இறைவன் புகழே பொருள்சேர்புகழெனப்பட்டது.

---

*Those who delight with fervent mind to praise*
*The true and only Lord of heav'n and earth,*
*No false ideas of right and wrong can cloud.*

"Lord of heaven and earth"—the original word here used to designate the Deity is இறைவன் which means *a lord, a prince* definitely *the Lord, God*: the two latter terms are not expressed, but clearly implied, as is, also, the preceding epithet "only", the words of the original, பொருள்சேர்புகழ் *praise connected with the reality or real nature* of God manifestly including the idea of the divine unity.

"Right and wrong"—literally *both deeds*, that is *all acts according to the law*, whether moral or ritual observances, and தீவினை *all acts contrary to the law.* The orthodox Hindus hold that the works of the law, by exercising the mind in the contemplation of divine things and gradually purifying it from its grosser propensities, are the only means by which a true knowledge of God can be obtained; but that when once in possession of this knowledge, works of every kind, the worship of the inferior deities, the performance of the sacrifices

of the Sruti, the ritual observances of the Smriti, distinction of meats and even moral obligations are of no further efficacy and the enlightened devotee perceives that the importance he has hitherto attached to them has arisen solely from the illusions of Maya from which he is for ever released. Hence the expression "false ideas" the original of which is இருள், lit: *darkness*, but here used in the acceptation of மயக்கம் *ignorance, inebriation, mental delusion.* Parimel-azhagar thus explains this distich. இன்னதன்மைத்தென வொருவராலுங் கூறப்படாமையின் விச்சையை யிருளென்றும்—நல்வினையும் பிறத்தற் கேதுவாகலி னிருவினையுஞ் சேராவென்றுங் கூறினார். இறைமைக்குணங்களி லராயினாரை யுடையரெனக் கருதி யறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேராவாகலின் அவை முற்றவுமுடைய விறைவன் புகழே பொருள் சேர் புகழெனப்பட்டது. *He calls that mental delusion which arises from matter, the nature of which no one can explain,* darkness *and, as good works are the cause of mortal births, he says the effect both of good and bad works ceases. The praises addressed by the ignorant to beings whom they imagine to be deities but who possess none of the qualities of the divine nature, not being founded in reality, it is here said that the praise of the Lord, who possesses all these qualities, is the praise of reality.* The word அவிச்சை rendered *mental delusion* is a corruption of the Sans. term அவிஜ்ஞா formed from the root ஜ்ஞா *know* by the incrementive வி prefixed and the privative: this word, though frequently used in high Tamil, like many others of the same derivation is not found in the dictionaries.

இருள் *Darkness, ignorance*; the nom. with the sense of the third abl in ஒடு governed by the following participle:—சேர் *joined, united,* the root of the verb சேர்தல் *to join,* used as an indefinite participle. Roots similarly used are called வினைத்தொகை *the conjunction of the verb,* because the meaning of the three times is conjoined in it; the Lation commentator, considers this form an abreviation of the future participle சேரும் *that will join* and in this he agrees with thv R. C. J. Beschi. I do not, however, find any authority for his doctrine in the Tamil Grammers; in explaining the Sutram of the Tolcappiyam வினையின்றொகுதி காலத்தியலும் in which the nature of the வினைத்தொகை is declared, the Commentator says,

*வினையென்றது உண், தின் முதலிய முதனிலைகளை அவை யீண்டாகுபெயராய்த் தன்னுற்பிறந்த பெயரெச்சத்தை யுணர்த்தின. தொகுதியாவன அகரமும் நின்ற கின்றவெனவு மும்முமாம். அவை காலத்தியலுதலாவது கொல்யானை.*

*The term verb implies* un, *tin* eat *and the rest being verbal roots, but it must be taken here, the whole being put for a part,* to signify a participle originating from it. *Connectives are the temporal termination of the participles,* namely a *for the past,* nindu *and* cindu *for the present, and* um *for the future*; *the conjunction of the meaning of these times is exemplifed in the word* col-yanei, which, as he proceeds to explain, may be rendered *an elephant which has killed, which kills or which will kill.* On this authority I consider சேர்

as it certainly is, the root used as an indefinite participle and shall so describe all similar terms.—இரு two; the adjective form before consonants of இரண்டு, before vowels it becomes ஈர்.—வினை act, deed, work; the nom. governing the neg. verb சேரா.—உம் *and*; உம் added to nouns of number and multitude or to interrogatives gives them a determinate meaning; thus இரண்டும் *both*, நான்கும் *all the four*, பறவையெல்லாமும் or யாவும் பறந்தன *every one of the birds flew away*, அதை யாருமறியார் *none can know that.*—சேரா will not unite; the 3rd pers. neg. of சேர்தல்.—இறைவன் *the Lord, God*; the nom. in regimen with the preceding part and in comp. with the following term. பொருள் *reality, truth*; under the same regimen a இருள், This word is used by Tiruvalluvar in various significations of which examples will hereafter appear.—சேர் as above.—புகழ் *praise*, the nom. for the acc. governed by the following part.—புரிந்தார் *they who love*; the contracted pron. part. past of புரிதல் *to love*, used indefinitely.—மாட்டு *in*; the abl. for the 7th case or 3rd abl. of மாடு *a place*, used as a preposition.

முதன்முதற் கவிவல்லவராயிருந்த

# ஔவையார் சரித்திரம்.



"பேதைமை என்பது மாதர்க்கணிகலம்" என்னும் நீதிவாக்கியமானது பெண்கள் சிரோமணியொருவர் பூர்வத்தில் சொல்லிய உறுதிமொழிகளில் ஒன்றென்று நாமெல்லோரும் சிறுவயதிலேயே படித்திருக்கிறோமல்லவா? இதற்கு அருத்தம் - எவ்வளவு படித்திருப்பினும் பெண்களுக்கு அறியாமையே ஆபரணமெனச் சிலர் சொல்லுகின்றார்களே! இது விபரீதார்த்தமென்று கொள்ளவேண்டும். இந்த நீதிவாக்கியத்தின் உண்மைப்பொருள் என்னவென்றால், ஸ்திரீகள் தந்தை தாய் கணவன் இவர்களை உபசரித்து அவர்களுடைய நற்குணங்களையும் நற்செய்கைகளையும் அறிந்து நடந்து அயலார் குணங்களை அறிய மனஞ்செல்லாமையே அவர்களுக்கு ஆபரணமென்பதாம். தங்களுடைய யோகக்ஷேமங்களில் கருத்துள்ள தந்தை தாயாருடைய வாசகங்களையும், கணவனுடைய சொற்களையும் பெண்கள் கைக்கொண்டு நடப்பது உசிதமேயல்லாமல் அயலாருடைய இதவசனங்களும் ஒழுக்கங்களும் இவர்களுக்குப் பயன்படுமோ? ஆதலால்தான் மேலே சொல்லிய அந்தப்பெண்கள் சிரோமணி "தந்தைசொன் மிக்க மந்திரமில்லை, தாய்சொற் றுறந்தால் வாசகமில்லை," எனவும் மற்றோரிடத்தில் முன்சொன்ன கருத்தையே உறுதிப்படுத்தி யிருக்கிறார். இவைபோன்ற பல நீதிவாக்கியங்களையும் சன்மார்க்கங்களையும் சிறுவர்கள் மனதில் கல்லின்மேல் எழுத்துப்போல் பதியும்படி அகராதிக்கிரமமாக அழகாய்க் கோத்துச் சொல்லி விளங்கவைத்த கவிகள் வேறொருவருமில்லை. இந்தக் கவிசிரோ

மணிக்குத்தான் ஔவையார் என்றுபெயர். இவர் சரித்திரமல்லாமல் தமிழ்நாட்டுப் பெண்களுக்கு இனிதாயிருக்கும் பெண்டீர் சரித்திரம் வேறெதுதான் இருக்கிறது? ஆகையால் இவர் சரித்திரத்தை ஒருவாறு இங்கே சுருக்கிச்சொல்லுகிறோம்.

பூர்வத்தில் தமிழ்நாட்டில் ஆதி என்றவளுக்கும் பகவன் என்னும் ஒரு பிராமணனுக்கும் பெண்மக்கள் நால்வரும் ஆண்மக்கள் மூவரும் பிறந்தனர். இந்த ஏழுபேரில் ஔவையார் என்பவள் மூத்தவள். இவளுடைய தம்பிமார்தான் குறள் எழுதிய திருவள்ளுவநாயனும் அகவல் எழுதிய கபிலரும் ஆவர்.

ஔவையார் பிறப்பின் வரலாறு இப்படி கர்ணபரம்பரையாய் வந்த சரித்திரத்தில் இருக்க, அடியில்காட்டிய வேறுவிதமான கதையொன்று சிலர் சொல்லுகிறார்கள். அதாவது:—பூர்வத்தில் வேதமொழி என்னும் பெயருடைய ஒரு பெரியவர் இருந்தார். அவருக்குப் பேராளி என்று ஒரு பிள்ளை இருந்தது. அதற்குப் பன்னிரண்டாம் வயதில் அவரிருந்த ஊரிலே தாழ்ந்தகுலத்தானகிய ஒருவன் வீட்டில் பிறந்த பெண்குழந்தை ஒன்றைக்கண்டு அது தன் பிள்ளைக்குப் பிற்காலத்தில் கலியாணம் செய்யத் தகுந்ததென்று நினைத்தார். அந்தப்பெண் பிறந்த தினத்தின் மாலைப்பொழுதில் அந்தச்சிசுவிருந்த வீட்டின் மீது நக்ஷத்திரமொன்று எரிந்து விழுந்தது. இதை வேதமொழி என்பவர்கண்டு அகரத்தில் இருந்த சாஸ்திரிகளிடத்தில் சென்று தான் கொண்ட கலியாணக்கருத்தைச் சொல்லாமலே நக்ஷத்திரம் "அதோ அந்த வீட்டில் எரிந்து விழுந்தது அநிஷ்டமாயிற்றே! இதனல் யாவருக்கு என்ன விளையும்"? என்று கேட்டார். அவர்கள் யோசித்துப் பெண்ணுக்குத் தகப்பனை வருவித்து "இந்தக் குழந்தை ஊரிலிருந்தால் இந்த ஊரே நசித்துப்போம்; வந்த

ஆபத்து அந்தக்குழந்தை தலையோடு போகவேண்டுமா? அல்லது எல்லோரும் அனுபவிக்கவேண்டுமா"? என்றார்கள். பெண்ணைப்பெற்றவன் "தங்கள் கட்டளைப்படி நடந்துகொள்ளுகிறேன்," என்றான். அவர்கள் இதை உயிரோடு வைத்தலாகாது என்றார்கள். அதற்கு வேதமொழி என்பவர் சிசுவதை செய்வது சரியல்ல என்று மறுத்துச் சின்னதாகத் தெப்பமொன்றைக்கட்டி அந்தப் பெண்குழந்தையைக் காவேரி வெள்ளத்தில் விட்டுவிட்டால் உத்தமம் என்றார். அப்படி செய்வதற்குமுன்னே வேதமொழியென்னும் விருத்தர் தன் பன்னிரண்டுவயதுள்ள பிள்ளையைத் தனியாய் அழைத்து "இந்தக் குழந்தையின் உடம்பில் அடையாளமாக ஏதாவது மாசுமருவு இருக்கிறதா பார்த்துவா" என்று அனுப்ப, அக்குழந்தையின் தொடையில் ஒரு கறுப்புமச்ச மிருக்கிறதாக அந்தப்பிள்ளை வந்து சொல்லிற்று.

தெப்பத்தில் வளர்த்திவிட்ட குழந்தையைக் காவேரி ஆறு கொண்டு போகிறபோது அந்த ஆற்றங்கரையில் ஜபம்பண்ணிக்கொண்டிருந்த பிராமணன், மிதந்து வருவதைக்கண்டு எழுந்து ஜலத்தினருகில் போய்ப் பார்க்கையில் தெப்பத்தில் கண்ணை விழித்து விழித்துச் சிரித்துக்கொண்டிருக்கும் சிசுவைக்கண்டு சந்தானமில்லாத அவன் நமக்குத்தான் இதுவரையில் செய்த தவத்துக் கிரங்கிக் கடவுள் கிருபைசெய்து தன் கோரிக்கையின்படியே இந்தக் குழந்தையை அளித்தாற்போல் காண்கிறதென்று நினைத்து அன்பாக அதை எடுத்துத் தன்வீட்டுக்குக் கொண்டுபோய்த் தன் குழந்தையாகப் பாவித்து வளர்த்து நல்வழி நற்செய்கைகளை வயதுக்குத்தக்கபடி போதித்து வந்தான். இது இப்படியிருக்க, வேதமொழி என்பவர் பிள்ளையாகிய பேராளி வயதுவந்து தீர்த்தயாத்திரை செய்துகொண்டு போகும்போது காவேரியிலிருந்து பெண்ணை எடுத்து வளர்த்த பிராமணன் அவனைக்கண்டான்.

அந்தப் பிரமசாரியினுடைய குணாதிசயங்களைப் பார்த்துத் தானெடுத்து வளர்த்த பெண்ணுக்குத் தகுந்த புருஷன் இவன்தானென்று மனதில் நினைத்து நீர் நமது பெண்ணை விவாகம் செய்துகொண்டு இங்கேயே யிருக்கலாம் என்று சொல்ல, அதற்கு ஒத்துக்கொண்டு கலியாணத்தை நிறைவேற்றிச் சிலநாள் சென்றபின்பு அந்தப்பெண் ஸ்நானம் செய்து மடியுடுத்தும்போது இவன் தற்செயலாய் அவள் தொடையிலிருந்த மச்சத்தைக் கண்டுவிட்டான். உடனே "ஆஆ! இவள் முன்னே நம்முடைய கிராமத்தில் தாழ்ந்தஜாதியில் பிறந்து ஊருக்கு உதவாதென்று காவேரியில் விடப்பட்டவளல்லவா?" என அநுமானித்து உன்னுடைய வரலாறு என்னவென்று அவளையே விசாரித்தான். அவள் சொன்னதில் சந்தேகநிவர்த்தி யுண்டாகாமையால் மனவிசாரத்துடன் சொல்லாமல் விட்டுவிட்டு ஓடிப்போனான். அவள் பின்தொடர்ந்து என்னை விட்டுப்போவது உமக்குத் தருமமா? என்று வழிமறித்துத்திரும்பி வீட்டுக்கு வரும்படி மன்றாடியும் அதற்கு இணங்காமல் உதறி விட்டுப் போய்விட்டான். துக்கத்தில் மூழ்கின இந்தப் பெண், தன்னைத் தகப்பன்போல் வளர்த்து ரக்ஷித்தவன் வீட்டுக்குச் செல்லாமல் தலைமேல் துணிபோட்டுக் கொண்டு கண்ணும் கண்ணீருமாய் அழுதுகொண்டே போய் விட்டாள். அப்படி போகும்போது வழியில் எதிர்ப்பட்ட ஒரு பிராமணன் இவளுடைய ரூபத்தையும், அலங் கோலத்தையும் கண்டு இவளுடைய வரலாற்றை விசாரித்து, "அம்மா ஏன் விசனப்படுகிறாய்? உன்னைப்போல் என்வீட்டில் பெண்களிருக்கிறார்கள்; அவர்களுக்குச் சகோதரியாய் நீயும் இருக்கலாம்" என்று வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனான். சிலநாளைக்கெல்லாம் அந்தப்பிராமணனுக்கு மரணகாலம் நேரிட்டது. அப்போது அவன் தனக்குள்ள ஆஸ்தியைத் தன் குமாரத்திகளுக்கெல்லாம் பாகிக்கும்போது இந்தப்பெண்ணுக்கும்

ஒருபங்குவைத்து இறந்துவிட்டான். பிறகு இவளுக்குக் கிடைத்தபொருளை எடுத்துக்கொண்டுபோய், அக்குக் தொக்கு இல்லாதவளுக்கு இந்தப் பொருளிருந்து என்ன பிரயோஜனம்? ஆகையால் இதைத் தருமவழியில் செலவழித்து விடுவோம், என்று நிச்சயித்துக் காசிக்குச் சமீபத்தில் ஒரு சத்திரங்கட்டித் தானங்கிருந்துகொண்டு தீர்த்தயாத்திரை வருபவர்களுக்கெல்லாம் அன்னதானம், தண்ணீர்ப்பந்தல், சதாவர்த்தி முதலியவைகள் செய்து கொண்டு, வருகிறவர்களிடத்தில் தன் குறையை முறையிட்டுக்கொண்டும் அவர்களுக்குத் தெரிந்த விருத்தாந்தங்களைச் சொல்லும்படி கேட்டும் நாளைக்கழித்துக் கொண்டிருந்தாள். இப்படி சில வருஷம் சென்றபிறகு இவளை அகதியாக விட்டுப்போன புருஷனும் அதே சத்திரத்தில் வந்து சேர்ந்தான். ஒருவருக்கொருவர் அடையாளந் தெரியாமல் சத்திரக்காரி அவனுக்குச் சதாவர்த்திகொடுத்துப் போசனம்பண்ணினபிறகு தன் துக்கத்தை அவனிடத்திலும் வழக்கப்படி முறையிட்டுக்கொண்டாள். அந்தப்பிராமணன் ஒன்றும்சொல்லாமல் நித்திரைசெய்கிறவன்போல் இருந்து விடியற்காலத்தில் இருள் பிரிவதற்கு முன்னே சொல்லாமல் பிரயாணப்பட்டான். இதைப் பார்த்திருந்த சத்திரக்காரி "போகிறேன் என்று சொல்லாமலே போகிறீரோ? நான் உமக்குச்செய்த உபசாரங்களில் குற்றங்குறையிருந்தால் மன்னிக்கவேண்டும். என் புருஷன் என்னுடன்சொல்லாமல் விட்டுவிட்டுப் போனது போல நீர் இப்பொழுது போகிறீரோ. தாமரையிலையில் தண்ணீர்போல் தவிக்கிறேனே" இது சரியா என்றாள். அதைக்கேட்ட பிராமணன் மனதிரங்கி உள்ளத்தை மறைக்கமாட்டாமல். நானே உன் புருஷனென்று தன் வரலாற்றையும் சொல்லி இருவரும் கூடிக்கொண்டு அங்கங்கே யாத்திரை செய்துகொண்டே ஏழுபிள்ளைகளைப் பெற்றார்கள். அவர்களில் முதற்பிறந்தவர்தான் ஔவையாராம்.

ஔவையார் தந்தையான பகவன் என்பவர், தான் என்னை கட்டளையிட்டாலும் அதன்படியே நடக்கவேண்டியதென்றும், பிறக்கிற பிள்ளைகளைப் பிறந்தவிடத்திலேயே, "மரம்வைத்தவன் தண்ணீர்வார்க்கிறான்" என்று சொல்லிக் கடவுளை நம்பிப் போட்டுவிட்டுத் தன்னுடனே வந்துவிடவேண்டியதென்றும் அந்த ஆதி என்னும் மனைவியுடன்சொன்னார். இது அவர், அவள்மனதைச் சோதிப்பதற்காகச் செய்த உபாயமேயொழிய வேறல்ல; அவள் அப்படியே ஆகட்டுமென்று சம்மதித்தாள். ஆயினும் அருமையாய்ப் பெற்ற பிள்ளைகளை எடுத்தணைப்பாரில்லாமல் அந்தரமான காட்டிலே போட்டுவிட்டுப் போகும்படி நேரிட்டபோது அவளுக்கு உண்டான துக்கம் இவ்வளவ்வளவல்ல. அப்படி பெற்ற தாய் படுகிற சங்கடத்தைப் பார்த்து ஒவ்வொரு பிள்ளையும் ஏற்ற சமாதானம் சொல்லி அவளது மனத்துயரத்தை மாற்றியது. அவளுக்குப்பிறந்த பிள்ளைகளெல்லாம் தெய்வத்தன்மை பொருந்தியனவாதலால் அவற்றின் வாயினின்றும் வந்தபேச்செல்லாம் சீர் தளைகள் அமைந்த பாட்டாகவேயிருந்தன. அவைகளில் முதற்பிள்ளை பிறந்தபோது அதைவிட்டுப் போக மனந்துணியாமல் அந்தத்தாய் வருத்தப்படுவதைப் பார்த்து அக்குழந்தை, "என்னுடையகதி இப்படியென்று தலையிலெழுதிப் பிறப்பித்த பரமசிவன் செத்துப்போனானோ! அவன் தானே காப்பாற்றுகிறான்; நீ விசாரப் படவேண்டாம்.

"இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்றாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ."

என்னும் வெண்பாவைப்பாடியது. அதுகேட்டுத் தாய் துணிவுகொண்டு குழந்தையை அங்கேயே போட்டுவிட்டுப் போயினளாம்.

மற்ருேரிடத்தில் இரண்டாவது குழந்தை பிறந்தது. அதையெறிந்துவிட மனம்வாராமல் தாய் வருந்தியது கண்டு அக்குழந்தையானது, "தாயே, இப்பிரபஞ்சத்தில் சகலமான பிராணிகளையும் படைத்துக் காக்கின்ற கடவுள் ஓடிப்போனுனே; காப்பாற்ற உடன்பட்டவன் அவனிருக்க நீயேன் விசாரப்படுகிருய், வேண்டாம்" என்று சொல்லிற்று. அதைக்கேட்டுத் தாயானவள் குழந்தையை அங்கேயே விட்டு அப்புறம் போயினுள்.

பிறகு மூன்ருவது குழந்தை பிறந்தபோதும் அதைவிட மனந்துணியாமல் அவள் அப்படியே வருத்தப்பட்டாள். அதுகண்டு அக்குழந்தை "அம்மா, கருப்பைக்குள் இருக்கிற குழந்தைக்கும், கல்லுக்குள்ளிருக்கிற தவளைக்குங்கூட உணவு அளித்துக் காக்கின்ற லோகரக்ஷகன் என்னைக் காப்பாற்ருமல் கைவிடுவானு; இதற்காக நீ வருத்தப்படவேண்டாம், சந்தோஷமாய்ப்போ" என்றது.

அப்படியே நான்காவது பிள்ளையும், தன்னைவிடமாட்டாமல் தவிக்கும் தாயைநோக்கி, "கருப்பைக்குள்ளிருக்கிற குழந்தை தாய் உண்ணும் உணவினுலேயே, தானும் போஷிக்கப்பட்டு வருகின்றதே; இது ஜகதீசனுடைய செயலல்லவா? அது தெரியாமல் நீயேன் அலைந்து தவிக்கிருய்" என்று சொல்லிச் சமாதானப் படுத்தியது.

அப்பால் ஐந்தாவது பிள்ளை, "நடுக்காட்டில் ஒரு கல்லுக்குள் அடங்கியிருக்கும் தவளையை அறிந்து அதற்கு உணவு அளிக்கிற ஆண்டவன் நமக்குப் படியளக்கமாட்டானு? இதைவிட அவனுக்கு வேறுதொழிலென்ன?" என்று உரைத்து மாதா மனம் மகிழும்படி செய்தது.

பிறகு ஆருவது குழந்தை, "தாயின் வயிற்றிலிருக்கும்போது உணவு ஊட்டிவளர்த்த பேரருளாளன் இனி வளர்க்காமல் உபேக்ஷை செய்வாரோ? அந்த விசாரம் உனக்கு வேண்டாம் போ" என்று சொல்லிச் சந்தோஷப்படுத்தியது.

அவ்விதமாகவே ஏழாவது குழந்தையும் தன்னை விடமாட்டாமல் தாய் வருந்துவதைப்பார்த்து, "அன்னாய்! உலகத்திலுள்ள உயிர்கள் அனைத்தையும் காக்கக் கடமைப்பட்ட கடவுள் ஒருவர் இருக்கிறார்" என்றதாம்.

இவையெல்லாம் உண்மை என்று துணிந்துசொல்ல ஆதாரமில்லையென்றும் அதிசயவலங்காரமென்றும் எழுதினவர் கற்பனாசக்தியை மாத்திரம் காட்டுகிறதென்றும் இக்காலத்தார் நினைக்கக்கூடும். இதுநிற்க,

எல்லாதேசங்களிலும் பழைய மஹாகவிகளைப்பற்றிப் பல கட்டுக்கதைகள் சொல்வதுண்டு. ஐரோப்பியரில் ஆதிகவியாகிய கிரேக்தேசத்து ஹோமர் என்பவரைப் பற்றி ஒரு ஸங்கதியும் அதிமாகத் தெரியவில்லை; ஷேக்ஸ்பியர், காளிதாஸன் இவர்களைப்பற்றித் தெரிந்திருப்பதும் சொற்பமே. அதேவிதமாகவே பூர்வகாலத்திலிருந்த பெருமைபெற்ற பெண்கவியாகிய ஔவையாரைப்பற்றியும் பிறப்பு முதலான வாழ்நாள் விசேஷங்கள் அதிகமாக ஒன்றும் தெரியவில்லை. ஆயினும் அம்மாதர்சிரோமணியின் கல்வித்திறம் போதனாசக்தியுமே நமக்குத்தெரியும். அவள் மிக்க அநுபவசித்தி பெற்றவளாகையாலும் மிகச் சிறந்த ஆசுகவியாதலாலும் உலகத்தியலுக்கு அமைந்த ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்கிற நீதிவாக்கியங்களாலும் மூதுரை நல்வழி என்கிற நீதிநூல்களாலும் சில குறள் பாட்டுகளாலும் வேறு சிறு பாடல்களாலும் அவளுடைய பெயர் நாளைக்கும் மிகப் பிரசித்தமாய் எங்

கும் விளங்குகின்றது. இப்பெண்மணி மிகப்புகழ்பெற்ற பாவலர்களுடன் தோன்றி யவளென்பதும், அவளுடைய சகோதரிகள் நான்குபேர் அவளைப்போலவே கல்வித் தேர்ச்சி யுடையவர்களா யிருந்தார்களென்பது மாத்திரம் கர்ணபரம்பரையால் விளங்குகின்றது. இப்படி கவிராயர் புவிராயர் முதலானவர்களால் புகழப்பட்ட ஔவையார் எழுதிய நீதிவாசகங்கள் இத்தமிழ்நாட்டில் வீடுகளில் சாதாரணமாய்ப் பழமொழிகளாக வழங்குகின்றன. அந்த வாக்கியங்களால் விளங்கும் நீதிகளும் நல்லொழுக்கங்களும் ஒருநாளும் மறக்கத்தக்கவையல்ல. அவைகளில் சில வற்றை இதனடியில் காண்க:—

தாய்தந்தையர்.

தந்தைதாய்ப்பேண்.
அன்னையும்பிதாவுமுன்னறிதெய்வம்.
தந்தைசொன்மிக்கமந்திரமில்லை.
தாய்சொற்றுறந்தால்வாசகமில்லை.

கல்வி.

இளமையிற்கல்.
எண்ணெழுத்திகழேல்.
கேள்விமுயல்.
நூற்பலகல்.
வித்தைவிரும்பு.
நிற்கக்கற்றல் சொற்றிறம்பாமை
ஓதாதார்க்கில்லையுணர்வொடுமொழுக்கம்.
கைப்பொருடன்னின்மெய்ப்பொருள்கல்வி.

மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—மன்னனுக்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்ற விடமெல்லாஞ் சிறப்பு.

தானதருமம்.

அறஞ்செயவிரும்பு.
அறனைமறவேல்.
ஐயமிட்டுண்.
தானமதுவிரும்பு.
வையொத்திருந்தாலையமிட்டுண்.

ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வ
மாறிடு மேறிடு மானிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறு முயர்ந்து.

பயிர்த்தொழில்.

நெற்பயிர்விளை.
பருவத்தேபயிர்செய்.
பூமிதிருத்தியுண்.
மேழிச்செல்வங்கோழைபடாது.
சீரைத்தேடின் ஏரைத்தேடு.
தொழுதூண்சுவையினுழுதூணினிது.

ஆற்றங் கரையின் மரமு மரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

நன்றிமறவாமை.

நன்றிமறவேல்.

நன்றி யொருவர்க்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால்.

சிநேகம்.

இணக்கமறிந்திணங்கு.
கூடிப்பிரியேல்.
சேரிடமறிந்துசேர்.
தொன்மைமறவேல்.
மூர்க்கரோடிணங்கேல்.
நல்லிணக்கமல்ல தல்லற்படுத்தும்.

நற்றா மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம்.

அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு.

ஊக்கம்.

ஊக்கமதுகைவிடேல்.
நன்மைகடைப்பிடி.
ஊக்கமுடைமை ஆக்கத்துக்கழகு.
கேட்டிலுறுதி கூட்டுமுடைமை.
போனகமென்பது தானுழந்துண்டல்

கோபம்.

ஆறுவதுசினம்.
கடிவதுமற.
சுளிக்கச்சொல்லேல்.
தீராக்கோபம் போராய்முடியும்.

கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே—விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்.

ஒழுக்கம்.

அழகலாதனசெயேல்.
சையெனத்திரியேல்.
தக்கோனெனத்திரி.
நேர்படவொழுகு.
பிடுபெறுகில்.
மேன்மக்கள்சொற்கேள்.
உத்தமனாயிரு.
ஓதலினன்றே வேதியர்க்கொழுக்கம்.
சான்றோரென்கை ஈன்றோர்க்கழகு.
நூன்முறைதெரிந்து சீலத்தொழுகு.
பூரியோர்க்கில்லை சீரியவொழுக்கம்.

புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொரு—ளெண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர்சொல்லும்
தீதொழிய நன்மை செயல்.

குடித்தனப்பாங்கு.

வளவனாயினும் அளவறிந்தழித்துண்.

ஆன முதலி லதிகஞ் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் எழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

தெய்வபக்தி.

திருமாலுக்கடிமைசெய்.
தெய்வமிகழேல்.
சிவத்தைப்பேணிற் றவத்திற்கழகு.
தெய்வஞ்சீறிற் கைதவமாளும்.

சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை—உபாய
மிதுவே மதியாகும் அல்லாத வெல்லாம
விதியே மதியாய் விடும்.

## அடியில் அச்சிட்டிருப்பவை கர்ணபரம்பரையாகவந்த தனிப்பாடல்கள்.

### கொடியது.

கொடியதுகேட்கி னெடியவெவ்வோலோய்
கொடிதுகொடிது வறுமைகொடிது
அதனினுங்கொடிது இளமையில்வறுமை
அதனினுங்கொடிது ஆற்றொணாக்கொடுநோய்
அதனினுங்கொடிது அன்பிலாப்பெண்டீர்
அதனினுங்கொடிது இன்புறவவர்கையிலுண்பது
[தானே.

### இனியது.

இனியதுகேட்கிற் றனிநெடுவேலோய்
இனிதுஇனிது ஏகாந்தமினிது
அதனினுமினிது ஆதியைத்தொழுதல்
அதனினுமினிது அறிவினர்ச்சேர்தல்
அதனினுமினிது அறிவுள்ளாரைக்
கனவினுங் காண்பதுதானே.

### பெரியது.

பெரியதுகேட்கி னெரிதவழ்வேலோய்
பெரிதுபெரிது புவனம்பெரிது
புவனமோ நான்முகன்படைப்பு
நான்முகன்கரியமா லுந்தியில்வந்தோன்

புவியோ அரவினுக் கொருதலைப்பாரம்
அரவோவுமையவள் சிறுவிரன்மோதிரம்
உமையோவிறைவர் பாகத்தொடுக்கம்
இறைவரோதொண்ட ருள்ளத்தொடுக்கம்
தொண்டர்தம்பெருமை சொல்லவும்பெரிதே.

அரியது.

அரியதுகேட்கின் வரிவடிவேலோய்
அரிதரிது மானிடராதலரிது
மானிடராயினுங் கூன்குருடுசெவிடு
பேடுநீங்கிப் பிறத்தலரிது
பேடுநீங்கிப் பிறந்தகாலையும்
ஞானமுங்கல்வியு நயத்தலரிது
ஞானமுங்கல்வியு நயந்தகாலையும்
தானமுந்தவமுந் தான்செயலரிது
தானமுந்தவமுந் தான்செய்வராயின்
வானவர்நாடு வழிதிறந்திடுமே.

நாற்பொருள்.

ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

தாய்தந்தை முதலானோர்.

தாயோ டறுசுவைபோந் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—ஆயவாழ்
வுற்று ருடன்போ முடற்பிறப்பாற் றோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம்.

# திருவள்ளுவர்



பிரமதேவனே திருவள்ளுவராக அவதரித்தாரென்பது கர்ணபரம்பரையாய்வந்த வரலாறு யிருப்பது உண்மையோ, கற்பிதமோ இதை ஊகித்து உணர்ந்துகொள்ளலாம்.

சாதுர்யமானவரலாறு.

இவர் சென்னை நகரிற்சேர்ந்த மயிலாப்பூரிலே ஒரு வள்ளுவன்வீட்டிலே வளர்ந்தவர். இவர் தாயார் ஆதிஎன்பவள். தகப்பனார் பகவன் என்பவர். இவ்விருவர்களும் நாடெங்கும் சஞ்சரித்துக்கொண்டு வருகையில் மைலாப்பூரில் ஓர் இலுப்பைத்தோப்பில் வந்து தங்கினார்களாம். அப்பொழுது திருவள்ளுவர் ஏழாவது குழந்தையாகப்பிறந்தார். பெற்றோரிருவரும் தாங்கள் முதலில் ஒத்துக்கொண்டபடி இக்குழந்தையை அங்குவிட்டுவிட்டு நீங்கிய தருணத்தில் அதனை யார் காப்பாற்றுவாரென்று தாய்வருந்தியபோது திருவள்ளுவராங்குழந்தை ஓர் வெண்பாப்பாடியது.

வெண்பா.

எவ்வுயிருங் காக்கவொரு வீசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யானொருவ னல்லவோ—வவ்வி
அருகுவது கொண்டிங் கலைவதே னன்னே
வருகுவது தானே வரும்.

இதைக் கேட்டுவிட்டுப் பெற்றோரிருவரும் தீர்த்தயாத்திரை போயினர். இவர்களுக்கு வெவ்வேறு இடங்களில் திருவள்ளுவர் பிறந்ததற்குமுன் ஆறுகுழந்தைகள் பிறந்தனவாம்.

| | | |
|---|---|---|
| முதற்குழந்தை | ஔவை | பெண். |
| 2-வது | உப்பை | பெண். |

| | | |
|---|---|---|
| 3-வது | அதிகமான் | ஆண். |
| 4-வது | உறுவை | பெண். |
| 5-வது | கபிலர் | ஆண். |
| 6-வது | வள்ளியம்மை | பெண் |

பிறந்த ஏழுகுழந்தைகளுள் ஆண் மூன்று; பெண் நான்கு. பெற்றோர் பிரியும்போது எல்லாக்குழந்தைகளும் பிரிவுக்கஞ்சாது பாடல்கள் பாடின.

திருவள்ளுவர் வேதசாஸ்திரங்களில் வெகு நிபுணராயினார். தமது புலமையைத் தமிழில் குறட்பாவாகப் பாடியுள்ளார். அதுதான் இப்பொழுது திருக்குறளென்று எல்லாநாட்டிலும் பலபல பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு வழங்கிவருகின்றது. அது 133 அதிகாரமுள்ளது; 1330 குறள் வெண்பாகொண்டது. ஒருசமயத்தையும் நாடாது பொதுநூலாய் மூன்று புருஷார்த்தங்களையும் யாரும் பகுத்துணர்ந்து நற்கதிபெற உலகிலெங்கும் எப்பாஷையிலும் கிடையாத இரத்தினச்செப்புப் போன்ற சிறந்தநூல் இதுவே. சகலவேத உபநிடதங்களின் ஸாரமாய் எச்சமயத்தோரும் சிரமேற் கொண்டு களித்துப்போற்றுநூல் இதுவே. இதற்கிணையான முதல் நூல் எங்குமில்லை. உக்கிரப்பெருவழுதி யெனும்பாண்டியன் மதுரையில் அரசாண்டகாலத்தில் இற்றைக்கு 1800 வருஷங்களுக்குமுன் திருவள்ளுவர் இவ்வுத்தரவேதமாஞ் சிறந்த நூலை யரங்கேற்றுவித்தனர். இவர் தாமாகவே அதனைத்துங் கற்றுணர்ந்தவர். யாரிடத்துங் கல்வி பயின்றவரல்லர். இவர்காலத்திலேயே இவர் நூல் எல்லாராலும் போற்றப்பட்டது. கடைச்சங்க மிருந்தபோது கடைசியாக அரசுசெய்தவன்றான் உக்கிரப்பெருவழுதி. சிலப்பதிகார நூற்காலம் 1765 வருஷங்களுக்கு முன்னையதாம். மணிமேகலை அதற்குப்பின் னுண்டாயது. திருக்குறள் இவ்விரண்டு நூல்களுக்கும் முற்பட்டதென்பது இலக்

கையிலாண்ட கயவாகுவின் சரிதத்தால் மகாவம்சமெ னும் நூலில் நிச்சயிக்கப்பட்டுள்ளது. திருவள்ளுவர் காலம் இன்றைக்கு 1850 வருஷங்களுக்கு முன்னுள்ள தென்பது நிச்சயம். ஏலேலசிங்கனென்னும் பிரபு மயிலை யில் கப்பல்வியாபாரம் செய்துவந்தார். இவர் திருவள் ளுவரின் நண்பர். இவ்வேலேலசிங்கர் 2060 வருஷங்களுக் குமுன் சோழமண்டலத்தி லரசாண்ட ஏலேல சிங்கனெ னும் அரசன்மரபினர். இவ்வரசன் இலங்கையை வெற்றி கொண்டு அரசாண்டவன்.

இல்லறம் துறவறமென்னும் இரண்டு மார்க்கத்தை யும் நன்குணர்ந்து அவைகளை மாந்தர்க்குபகரித்தவர் திரு வள்ளுவரே. இல்லறத்திற்கு அன்பே முக்கியமென்பதை யும் துறவறத்திற்கு அவாவின்மையே முக்கியமென்பதை யும் சித்தாந்தம் செய்துள்ளார். இது இவரது தெய்வப்புல மையை இனிது விளக்குகின்றது. இவர் நண்பினரது கப்பல் தரையிற்றட்டியபோது திருவள்ளுவர், "ஏலே லையா" என்றுகூறி அக்கப்பலைத் தொட்டபோது மிதந்த தென்பதும் பாரமிழுப்போர் இன்றும் "ஏலேலையா" என்றுசொல்லி யிழுப்பதும் திருவள்ளுவர் காலந்தொட்டு நடைபெறுகின்றது.

கபிலர் செய்துள்ள அகவலில் எழுவர் பிறப்பும் கூறப் பட்டுளது; பிறந்தஇடமும் பெயரும் சுட்டப்பட்டுள்ளன.

குறளில் நிரூபிக்கப்பட்டுள்ள நீதிவிஷயங்கள் கேட் பவர் நெஞ்சினுள் பசுமரத்தாணிபோல் பதிந்து பயன்ற ருவதாகின்றது. திருவள்ளுவரின் போதனைத் திறமும் நியாயநிரூபண வல்லமையும் இவ்வுலகில் எங்கும் கிடைப் பனவல்ல. கலைமகள் காந்தனான பிரமனே திருவள்ளுவ ராய்ப்பிறந்துள்ளாரெனில் அவர் கலாவல்லமைக்கிணை எங்கேனுமிருக்குமா? இராதென்பது நிச்சயமே.

காழியில் தவஞ்செய்யும் சிவபாதவிருதயர்க்குக் குமாரராய்ப் பிறந்து உலகவாசனை விளங்குமுன் சிலகாலம் உழல்வீர். குழந்தைப் பருவத்தில் என்தந்தையான சிவபெருமானருளாலே என்தாயின் பாலமுதுண்டு மெய்ஞ்ஞானமும் சித்தியும் சமணருடைய மதவாதத்தை வெல்லும் ஊக்கமும் புலமையும் பெற்று என்பதத்தராய் முத்தியடைவீர்" என்றுரைத்தார்.

அந்தப் பிரகாரமே உரோமசமுனிவர் சிவபாதவிருதயருடைய குமாரராக அவதரித்தார். அவதரித்து வளர்ந்து கொண்டிருந்த சிறுவர், ஒருநாள் பிதாவானவர் சிவாலயதரிசனத்துக்குச் செல்லும்போது தாமும் பின்னே சென்று, தந்தையார் திருக்குளத்தில் ஸ்நாநம் செய்யும்போது கரையிலிருந்து அழுவாராயினர். அப்போது, கந்தசுவாமி முன்னருளியவிதமே, பார்வதியம்மையார் ஊட்டியபாலை உண்டு அளவிலா ஆனந்தமடைந்தார். குழந்தையின் வாயிலிருந்து பாலொழுகுவதைக் கண்ட சிவபாதவிருதயர் "உனக்குப் பால் உண்பித்தவர் எவர்?" என்று கோபத்துடனே கேட்க, அச் சிறுவர் மேலே கையால் சுட்டிக்காட்டி

தோடுடையசெவியன்விடையேறி யோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனைநாள் பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே.

என்று தொடங்கி ஓர்பதிகம் ஓதினர். அதைக்கேட்ட சிவபாதவிருதயரும் மற்ற பிராமணர்களும் ஏனைச் சைவரும் அடைந்த ஆனந்தம் இவ்வளவினதென்னலாகுமோ? அன்று முதலாகத் தமது தந்தையின் தோள்மீதில் ஏறிக்கொண்டு பல சிவதலங்கடோறுஞ் சென்று பதிகங்கள் பாடிவந்தனர். பாடிவருங்காலத்தில் ஒவ்வொருதலத்தில் ஒவ்வொன்றாகச் சிவபெருமான் இச்சிறுவருக்குப் பொற்றாளம் முத்துப்பந்தர் சிவிகைசின்னம் பரிசனங்கள் முதலானவைகளை அருளினர்

இவரைச் சிலர் முத்தமிழ்விரகர் என்றும், சிலர் பாலறாவாயர் என்றும் இங்ஙனம் பலவிதமாகப் புகழ்தலாய், இவருடைய கீர்த்தி உலகமுழுவதும் பரவுவதாயிற்று. இவ்விதமாக இவர்க்கு ஐந்துவயது நிரம்பியது. திருநாவுக்கரசாம் அப்பர் பிள்ளையாரோடு மாகாளத்தில் வந்திருந்தபோது பிள்ளையார் அத்தலத்திற்கும் பதிகம் பாடினர்.

அக்காலத்தில் பாண்டியன் மனைவி, மங்கையர்க்கரசி என்பாள், சிறந்த சிவபக்தை,இச்சிறுவருடைய மகிமையெல்லாம் பலர் சொல்லக்கேட்டவள், இவரைக்கொண்டு தன்கணவனைத் திருத்த விரும்பி, மந்திரியான குலச்சிறை என்பவன் சிறந்த சிவபக்தனுதலை உணர்ந்து, அவன்மூலமாய்த் தன் கைப்பட எழுதிய திருமுகமொன்றினைச் சிவபாதவிருதயருடைய குமாரரிடம் அனுப்பினள். இவ்வரசியும் இவ்வமைச்சனும், இராஜதண்டனைக்கஞ்சி சமணவேடம் பூண்டவர்களாயினும், எவரும் அறியாமல் உச்சியிலே விபூதியணிந்து, அந்தரங்கத்தில் சிவத்தியானம் செய்பவர்கள், அரசனைச் சிவமதத்தில் சேர்ப்பித்துப் பழையபடி பாண்டி நாட்டைச் சிவமயமாக்க அவாவியிருந்தார்கள். ஓலையைக்கண்ட பரசமய கோளரியான சிறுவரும் அவ்விருவருடைய சிவநேசத்தின் திறத்தையும் அரசனுடைய மயக்கத்தையும் சமணர்களுடைய ஆக்கத்தையும் பெருக்கத்தையும் தேறினவராகி சிவிகையேறிப் புறப்பட்டார். உடனிருந்த திருநாவுக்கரசர் சமணரால் தீங்குநேரிடும் என்று பலவிதமாகச் சொல்லித் தடுத்தும், சிவனருளினும் வலியதொன்றுண்டோ என்று அவர்க்குச் சமாதானஞ் சொல்லிப்போய் மதுரைமாநகரை அடைந்து, சொக்கநாதரைத் தரிசித்துப் பதிகம்பாடினர். இவர் வரவைக்கேட்ட சாரணர்கள் உணர்வற்றனர். அரசனும் உளம் கவல்வானாயினன். அரசன் உளங்கவல்பவனாகியும் "ஞானசம்பந்தர் இங்கே வரவொண்ணாது; போய்விடும்" என்று கூறிற்றிலன். "இவர் மீனாக்ஷி சுந்தரேசுவரருடைய

திருவருளை நாட்டுதற்கு என்னவாதஞ் செய்வாரோ" என்று அரசன் தன் உள்ளத்தில் எண்ணினன். சம்பந்தமூர்த்தியும் ஒருமடத்தில் தம்முடைய பரிசனங்களுடனே தங்கியிருந்தார்.

அன்றிரவிலே சமணர்களிற் சிலர் சம்பந்தமூர்த்திகள் தங்கியிருந்த மடத்தில் தீயிட்டனர். அதனை அறிந்த ஞான சம்பந்தர்

செய்யனே திருவாலவாய் மேவிய
ஐயனே யஞ்சலென்றருள் செய்யெனைப்
பொய்யராமமணர் கொளுவுஞ்சுடர்
பையவே சென்று பாண்டியற்காகவே.

என்று தொடங்கிப் பதிகம் பாடினர். பாடுதலும் அந்த க்ஷணமே அரசன் கனற்சுரங் கொண்டு தவித்தான். அருகிலிருந்தவர்கள் யாதுசெய்தும் சுரம் தணிந்திலது. சமணமுனிவர்கள் வந்து மந்திரம் செபித்துக் கைப்பீலியால் தடவியும் சுரம் தணியவில்லை. அவர்களுடைய மணிமந்திர ஔஷதங்களால் சுரம் ஒருசிறிதும் தணியாமைகண்டு பொழுதுவிடிந்தவுடனே அரசன் அமைச்சனுன குலச்சிறையை அழைத்து மதுரையில் வந்திருக்கும் சைவர் தலைவரான சம்பந்தரை வருவிக்கும்படி வேண்டினன். அதனுல் மங்கையர்க்கரசியும் மகிழ்ச்சி யடைந்தாள் : தனது எண்ணம் என்னுகுமோ என ஏக்கமும் அடைந்திருந்தாள்.

அரமனையடைந்த திருஞான சம்பந்தர் அரசனையும் சாரணரையும் மதியாது மங்கையர்க்கரசியை நோக்கி "யான் இவ் வினைருக்கு எளியவனல்லேன். சொக்கநாதருடைய அருள் எனக்கு நிரம்ப உண்டு. நீவருந்த வேண்டா" என்று சொல்லி அவளை மகிழ்வித்தார். அப்பால் அரசன் சமணமுனிவரையும் சைவமுனிவரையும் சுரத்தின் ஒவ்வொருபாதியைத் தணிக்கும்படி வேண்டிக் கைகூப்பினன். உடனே சம்பந்தர் கையில் விபூதியெடுத்து

மந்திரமாவது நீறு வானவர்மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கதப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவாலவாயான் திருநீறே.

என்றாரம்பித்துத் திருநீற்றுப் பதிகத்தைப் பாடிப் பாண்டியனருகுற்றுப் பாதியுடலில் விபூதியைப் பூசினார். உடனே அப்பக்கம் குளிர்ந்தது. அந்தப்பக்கத்திலிருந்த சூடும் மற்றொரு பக்கத்தில் சென்றடைந்தாற்போலே மற்றப் பக்கம் மிகவும் கொடுமையாக வருத்துவதாயிற்று. சமண முனிவர் கையிற் பீலிகொண்டு மிகத்தடவித் தாம்படித்த மந்திரத்தைப் பலவுரு செபித்தார். சுரம் ஒருசிறிதும் தணிதலில்லையாய் அரசன் சைவ முனிவரை நோக்கி, "சுவாமீ இந்தப்பக்கமும் உம்முடையதே" என்று திரும்பினன். அப்போது சமணர்கள் "இவர்கையிலுள்ள விபூதியன்றி வேறொன்றால் சுரந்தீர்ப்பது நன்றாகும்" எனச் சம்பந்தரும் சிவாலய மடைப்பள்ளியினின்றும் சாம்பரை வருவித்துப் பூசினர். பாண்டியன் சுரம் தீர்ந்தது மாத்திரமேயன்றி முதுகு கூனும் நிமிர்தலரானன்.

அப்பால் சமணர்கள் " இனித் தருக்கம் பேசி இவரை வெல்லுதல் கூடாது " என்று யோசித்து " இவரை அக்கினியாலும் ஜலத்தாலும் வெல்வோம். வெல்லத் தவறினால் கழுவேறுவோம்" என்றனர். அதற்கும் சம்பந்தர் சம்மதித்தார். உடனே அரசனேவலால் அக்கினி அமைக்கப்பட்டது. சம்பந்தர் திருநள்ளாற்றின் மேலதாய்த் தாம் பாடிய திருப்பதிகம் எழுதிய ஏட்டை அக்கினியில் இட்டார். அது எரிவுறாமல் எழுந்தது. சமணர்கள் தங்கள் நூற்பொருளை எழுதிய ஏட்டை அக்கினியிலிட்ட அப்பொழுதே எரிந்து சாம்பலாகியது. அப்பால் வையையாற்றை யடைந்து சமணர்கள் " அத்திநாத்தி " என்றெழுதிய ஏட்டை இட, அது நீரோட்ட கதியிலே கடலைநோக்கிச் செல்வதாயிற்று. சம்பந்தர்

வாழ்கவந்தணர் வானவரானினம்
வீழ்கதண்புனல் வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லா மரனுமமே
சூழ்கவைய கமுந்துயர் தீர்கவே

என்பது முதலாகத் திருப்பாசுரம் எழுதிய ஏட்டை ஆற்றி விட, அவ்வேடு நீரோட்டத்துக்கு எதிர்முகமாக ஏறிச் சென்றது. அவ்வளவிலே பாண்டியன் சமணசம்பந்தத்தைப் பற்றற ஒழித்துவிட்டான். சமணர்கள் எண்ணாயிரவரும் கழுவேறி உயிர்விட்டனர்.

சிலநாள் அங்கிருந்து அப்பால் சம்பந்தர் தென்றிசையில் திருப்பதிகளில் பதிகம்பாடிக்கொண்டு செல்கையில் திருநெல்வேலியில் மூங்கிலின்கீழ்வாழ்கின்ற சிவபெருமானை வணங்கினர். பிறகு சமணர் தம்பொருட்டுக் கழுவேறிய பாவத்தை நினைந்திரங்கிச் சிவலிங்க ஸ்தாபனைசெய்து கொன்றை வில்வ முதலியவைகளால் அருச்சித்தனர். அப்போது சிவபெருமான் மகிழ்ச்சி யடைந்து இடபாரூடராய் எதிரில் தோன்றி "உனது செயலெல்லாம் எனது செயலே: நீ இரங்கவேண்டா" என்றருளிச்செய்து மறைந்தனர். அங்ஙனம் சம்பந்த மூர்த்திகள் அருச்சித்த சிவலிங்கத்தை இன்றளவும் தொண்டர்கள்நயினார் என்ற திருப்பெயரால் பலரும் தொழுதுவருகின்றனர்.

பாண்டியனும் மங்கையர்க்கரசியும் குலச்சிறையும் போற்றச் சம்பந்தர் ஆலவாயிற் பெருமானைப் போற்றிக்கொண்டு தமது நாட்டுக்குத் திரும்பும் வழியில், புத்தநந்தி என்பவன் வலியவரான பலபரிவாரங்களுடன் எதிர்ப்பட்டுச் சம்பந்தருடைய சின்ன மூதுகின்றவர்களைத் தடுத்து "என்னுடன் வாதில் வென்று சின்னமூதிச் செல்க" என்றனன். இந்தச் செய்தி சம்பந்தர் செவியை எட்டுதற்குள்ளாக, அவருடைய பரிவாரத்தில் தேவாரத் திருமுறைகளை ஏடுபிடித்தெழுதும்

வேதவேதியரான அடியவர் கோபங்கொண்டு "இந்தப் புத்தனுடைய தலையிலே இடிவிழுக" என்றனர். அவனும் அங்ஙனமே இடி தலையில்விழுந்து இறந்தான். சம்பந்தரும் செல்வழிச் சென்றனர்.

கூன் பாண்டியன் என்கிற பெயர்போய் நின்றசீர் நெடுமாறன் எனப்பெயர்பெற்ற பாண்டியன், தனது நாட்டின் வளமெலாம் பார்த்துவருபவன், திருநெல்வேலியிலே ஞானசம்பந்தர் பிரதிஷ்டைசெய்து அருச்சித்த சிவலிங்கப் பெருமானைக் கண்டவளவிலே "இவ்வூரில் யான் பலசிவபணிகள் செய்வேனாக" என்று உறுதிகொண்டு, தக்க இடந்தேடி அங்கே கோபுரம் மதில் வீதிமண்டபம் ஊஞ்சல் கலியாண மண்டபம் முதலியவைகளை நிறைவுறச்செய்து, அங்கே மேலோங்கித் தோன்றுவதான ஒரு சிவலிங்கம் முளைத்தல் வேண்டுமென்று பிரார்த்தித்தான். அங்ஙனம் வளர்ந்த லிங்கத்துக்கு மகாலிங்கம் எனத் திருநாமமிட்டுத் திருவிழாக்கள் பலவும் நியமித்து அவ்வூர்ப் பதிகத்தை வழுத்தி மிக்க தனம் வேண்டினோர்க்கு அவர்கள் மகிழுமாறு தனங்கொடுத்தான். பின்பு தொண்டர்கள்நயினருக்கும் பலதிருப்பணிகள் செய்து, அவ்வூரின் மேற்குத் திருவீதியிலே கண்டவர் வியக்கும்படியாகச் சம்பந்தப் பெருமானுக்கும் ஒரு கோயில் அமைத்தான். "குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னிங்கில்லை" என்னப்பட்டவன் இந்தப் பாண்டியனே என்பர். அப்பால் சிலகாலம் அரசாட்சி செய்திருந்து தன்மகனுக்கு அரசைக் கொடுத்துச் சிவபதமடைந்தான்.

சோணாட்டை அடைந்த சம்பந்தரும் பிறகு பலமகத்துவங்களைச் செய்து பல சிவதலங்களிற் பதிகம் பாடிச்சென்றனர். பலசிவதலங்களை நேரிற் சென்று தரிசியாமலே பதிகமிட்டுப்பாடினர். இப்படிப்பட்ட ஸ்தலங்கள் வைப்புஸ்தலங்கள் எனப்படும். மயிலாப்பூரிலே வைசியர் குலத்தில் சம்பு

புத்தியில் மிகுந்த சிவநேசரெனும் பெருஞ்செல்வரொருவரிருந்தார். பிள்ளையாரின் சரித்திரங்களைப் பல அடியாரால் கேட்டுக்களிப்படைந்தார். அவருக்குப் பிள்ளைப்பேறில்லாமல் பூம்பாவையெனும் அழகொழுகும் பெண் ஒருத்தி பிறந்திருந்தாள். இவளழகைத் தகப்பனார் கண்டுகளித்து என்னுடைய செல்வத்தையும் பூம்பாவையாம் என் மகளையும் என்னையும் ஞானசம்பந்த மூர்த்திகளுக்குக் கொடுத்துவிட்டேனென்று பலருமறியக்கூறினார். பிள்ளையார் அப்பொழுது மதுரையில் இருந்தனர்.

ஒருநாள் பூம்பாவை பாங்கிமாரோடு பூஞ்சோலையில் பூக்கொய்யப் போயிருக்கையில் மல்லிகைச் செடியருகில் ஒருநாகம் வந்து அவளைக் கடித்தது. பூம்பாவை உடனே மயங்கி விழுந்து மரித்தாள். பலவாறு முயன்றும் பூம்பாவை உயிர்த்தெழவில்லை. பிள்ளையார் வருமளவும் இவ்வுடலைத் தகனஞ்செய்து எலும்பையும் சாம்பரையும் சேமித்து வைப்பேனென்று கூறி அப்படியே அப்பெண்ணின் பிதா சேமித்துவைத்தார்.

பிள்ளையார் பிறகு பலதலங்களையும் தரிசித்துத்திருவொற்றியூர் வந்து சுவாமிதரிசனம் செய்தனர். சிவநேசர் அங்கே சென்று பிள்ளையாரை வணங்கிப் பரிவாரத்தோடு மயிலைக்கு எழுந்தருளுவித்தார். கோயிலின் வெளியில் கொணர்ந்து வைக்கப்பெற்ற பூம்பாவையின் எலும்புகள் நிறைந்த குடத்தைப்பார்த்துப் பிள்ளையார் "மட்டிட்டபுன்னை" எனும் பதிகத்தைத் துவக்கவே அப்பொழுது பூம்பாவை தன் கைவெளியே தோன்றக் குடமுடைந்து வெளியே வந்தாள். கண்டவரெல்லா மற்புத மெய்தினர். பிள்ளையாரை நோக்கிச் சிவநேசர் பெண்ணை மணம்புரிந்து கொள்ளவேண்டினர். பிள்ளையார் தாமே யுயிர்ப்பித்தமையின் மறுத்து விட்டனர். இது மயிலையில் நடந்த அற்புதம்.

பிள்ளையார் சோழநாட்டில் திருவாவடுதுறையில் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டிருக்கையில் அவர் தந்தையார் சிவபாதவிருதயர் "நான் யாகஞ்செய்யக்காலஞ் சமீப்பித்தது. அது நிறைவேறப் பொருள் வேண்டு"மென்றனர். உடனே பிள்ளையார் கோயிலினுட்சென்று சிவபிரானை நோக்கி "இடரினும் தளரினும்" எனும் பதிகத்தைப் பாடினர். பரமசிவனது அருளினாலே ஒருபூதம் விரைந்து வந்து பீடத்தின்மேல் ஆயிரம் பொன்பொருந்திய கிழியொன்றைவைத்து "இது உலவாக்கிழி பரமசிவன் உமக்கருளியது" என்று கூறிவிட்டு மறைந்தது.

பிள்ளையார் எழுந்து நமஸ்கரித்து அக்கிழியைச் சிரமேற்றாங்கி அதைத் தந்தையார் கையிற்கொடுத்துச் சீர்காழிக்கேகி அந்தணர்களைக்கொண்டு யாகத்தை விதிப்படி நிறைவேற்றும்படி வேண்டிக்கொண்டனர். இது திருவாவடுதுறையில் நடந்த அற்புதச்செய்கை.

இங்ஙனம் நிகழ்ந்து வருகையில் சம்பந்தருக்குப் பதினாறுவது பிராயம் நடப்பதாயிற்று. ஆளுடைய பிள்ளையார் திருக்கலியாண தினத்திற்கு முதற்றினம் சமாவர்த்தனம் பண்ணி ரக்ஷாபந்தனம் செய்துகொண்டு, திருத்தோணியப்பரை வணங்கிக்கொண்டு, முத்துச்சிவிகை மேலேறி, மங்கல வாத்தியங்களொலிக்க, குடைகள் சாமரங்கள் ஆலவட்டங்கள்நெருங்க, முத்துக்குடைநிழற்ற, அலங்காரத்தோடு கலியாணங் காணவந்த பலரும் புடைசூழ, திருநல்லூரிலுள்ள ஆலயத்துள் புகுந்து சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு, அந்தணர்கள் வேண்டுகோளின்படி அக்கோயிற் புறத்திலுள்ள ஒருமடத்திலே புகுந்தருளினர்.

மறுநாளாகிய விவாகதினத்தன்று பிள்ளையார் திருச்சின்னமூத முத்துக்குடைநிழற்ற முத்துச்சிவிகையினின்றிறங்கித் திருக்கலியாண மண்டபத்துட்சென்று ஆசனத்தின்மேல் வீற்றிருந்தார். நம்பியாண்டார்நம்பி, தம்மனைவியார் பாலும்

சுத்தஜலமுமேந்திப் பின்புறம்வர அங்குவந்து, தம்மனைவியார் கரகநீரைவார்க்க அதனால் பிள்ளையாரின் பாதங்களை விளக்கி, அத்தீர்த்தத்தை தம்சிரமேற் புரோக்ஷித்துக்கொண்டு உள்ளம் பூரித்துச் சுற்றத்தார்மேலுந் தெளித்தார். பிறகுபிள்ளையாருடைய திருக்கரத்திலே ஜலத்தைத் தாரைவார்த்து தமது கோத்திரத்தைச்சொல்லி என்னுடையபுத்திரியைத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாருக்குக் கொடுத்தேன் என்றார். மணமகளைக் கொண்டுவந்து வலப்பக்கத்திலிருத்தினார்கள். விவாகமுகூர்த்தம் இவ்வாறு நிறைவேறியது. குலமரபொத்த ஒரு பெண்ணை வரன்முறையாகத் திருமணம் நடத்துகையில், சம்பந்தர் கலியாணத்துக்கு வந்தவர்களும் பிறரும் சூழ ஆச்சாபுரத் திருவாலயத்தை யடைந்தார். அங்கே பலசூரியர்கள் ஒருங்கு கூடினாற்போலே ஒருபெருஞ்சோதி தோன்றியது. வந்தவர்க ளெல்லாரையும் அந்தச்சோதியினுள்ளே பிரவேசித்து நிசபதம் அடையுமாறு செய்தார். அப்போது ஒரு பெண்பால் "அடியேன் இதுபோது தூய்மையற்றிருக்கிறேன். என் செய்கேன்" என்று சொல்லித் திருவடிதொழுதாள். சம்பந்தர் "பெருநெருப்புக் கீரமில்லை. நீயும் உள்ளே பிரவேசிக்கலாம்" என்றருளிச்செய்து, இறுதியில் தாமும் மனைவியுமாக அச்சோதியுட் புகுந்தருளினார்.

---

### பஞ்சாக்கரப் பதிகம்.

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்

ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ரான கெடுப்பன வஞ்செ ழுத்துமே.

### நமச்சிவாயப் பதிகம்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
யோது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத நாம நமச்சி வாயவே.—

## திருப்பாசுரம்.

*அரியகாட்சி யாராய்த் தமதங்கைசேர்*
*எரியரேறுகந் தேறுவர்கண்டமும்*
*கரியர்காடுறை வாழ்க்கையராயினும்*
*பெரியராரறிவாரவர் பெற்றியே.*

*வெந்தசாம்பல் விரையெனப்பூசியே*
*தந்தையாரொடு தாயிலர்தம்மையே*
*சிந்தியாவெழுவார் வினைதீர்ப்பரால்*
*எந்தையாரவர் எவ்வகையார்கொலோ.*

*ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாதிமாண்பும்*
*கேட்பான் புகிலளவில்லை கிளக்கவேண்டா*
*கோட்பாலனவும் வினையுங் குறுகாமை எந்தை*
*தாட்பால் வணங்கித்தலை நின்றிவைகேட்கத்தக்கார்.*

*வாதுக்களாலும் எடுத்தமொழியாலுமிக்குச்*
*சோதிக்கவேண்டா சுடர்விட்டுள்ள எங்கள்சோதி*
*மாதுக்கநீங்கலுறுவீர்மனம் பற்றிவாழ்மின்*
*சாதுக்கள் மிக்கீரிறையே வந்து சார்மின்களே.*



## திருநீற்றுப்பதிகம்.

*வேதத்திலுள்ளதுநீறு வெந்துயர்தீர்ப்பதுநீறு*
*போதந்தருவதுநீறு புன்மைதவிர்ப்பதுநீறு*
*ஓதத்தகுவதுநீறு உண்மையிலுள்ளதுநீறு*
*சீதப்புனல்வயல்சூழ்ந்த திருவாலவாயான்றிருநீறே.*

*முத்திதருவதுநீறு முனிவரணிவதுநீறு*
*சத்தியமாவதுநீறு தக்கோர்புகழ்வதுநீறு*
*பத்திதருவதுநீறு பரவவினியதுநீறு*
*சித்திதருவதுநீறு திருவாலவாயான்றிருநீறே.*

காணவினியதுநீறு கவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம் பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறு மதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறு திருவாலவாயான்றிருநீறே.



## கோளறுபதிகம்.

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்ல வீணைதடவி
மாசறுதிங்கள் கங்கை முடிமேலணிந்தென்
உளமே புகுந்தவதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் நற்புதன் வியாழம்
வெள்ளி சனி பாம்பிரண்டுமுடனே
ஆசறுநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே.

என்பொடு கொம்பொடாமை இவைமார்பிலங்க
எருதேறி யேழையுடனே
பொன்பொதிமத்தமாலை புனல்சூடிவந்தென்
உளமேபுகுந்த வதனால்
ஒன்பதொடொன்றொடேழுபதினெட்டொடாறும்
உடனாய நாள்களவைதாம்
அன்பொடு நல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

உருவளர்பவளமேனி ஒளிநீறணிந்து
உமையோடும் வெள்ளைவிடைமேல்
முருகலர்கொன்றை திங்கள் முடிமேலணிந்தென்
உளமே புகுந்தவதனால்
திருமகள் கலையதூர்தி சயமாதுபூமி
திசைதெய்வமான பலவும்
அருநெறி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.



# மாணிக்கவாசகர்.

---

பாண்டிய நாட்டிலே வைகையாற்றின் கரையிலுள்ள திருவாதவூரில், அமாத்திய பிராமணகுலத்தில், வைதிகமார்க்கமும் சைவ மார்க்கமும் விளங்கவும், பௌத்தமதமாகிய இருளுடைந்தோடவும், பால சூரியன் போல ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார். அவருக்குத் திருவாதவூரர் என நாமகரணம் செய்யப்பட்டது. அவர் கர்ணவேதனை முதலிய மற்றைச் சடங்குகளும் செய்யப்பெற்று வளர்பவர், பதினாறு வயசினுள் வேதமுதலிய கலைகளைக் கற்று வல்லராயினர். அவருடைய கல்வித்திறமை முதலியவற்றை அறிந்தவர் சொல்லக்கேட்டு, அரிமர்த்தன பாண்டியன் அவரை வரவழைத்து, பலவரிசைக ளளித்து, மந்திரியுத்தியோகங் கொடுத்து மேம்படுத்தினன். திருவாதவூரர், படைக்கலப் பயிற்சி முதலியன உணர்த்தும் நூல்களையும் மனுமுதலிய நீதிநூல்களையும் ஐயந்திரிபற முற்றக் கற்றோராதலின், மற்றமந்திரிகளெல்லாரினுஞ் சிறந்த முதன் மந்திரியாகி, அரசனுக்குக் கண்ணுங் கவசமும் போலக் காரியஞ் செய்திருந்தார்.

இப்படியிருக்கு நாளில், மெய்ப் பொருளிது பொய்ப் பொருளிது என்று உள்ளபடி பகுத்தறியும் விவேகம் இவர் மனத்தில் உண்டாயிற்று. உண்டாகவே, நிலையில்லாத இம்மைமறுமை யின்பங்களில் உவர்ப்பு வரப்பெற்று, செம்மையாகிய மனத்தை யுடையராய், மோக்ஷத்தை அடையும் நெறியையே ஆராய்வாராயினர். மோக்ஷத்தை அடைதல் வேண்டு மென்னும் பேராசையாற் றூண்டப் பட்டு, வேதாகமாதி சாஸ்திரங்களிலே வல்ல பெரியோர்கள் தம்மிடத்து வருந்தோறும், தாம் அவரிடத்துச் சென்று காணுந்தோறும், அவர்களோடு மிகவும் அளவளாவி மெய்ப்பொருள் ஆராய்ந்தார். இப்படிப் பலரிடத்தும் ஆராய்ந்தும் ஞானாசாரியர் அகப்படாமையால், தாகத்துக்கு உவர் நீருண்டு விடாய்தணி

யாதார்களைப் போல மனவமைதி பெற்றுமிருந்தவர், சிவ பெருமானிடத்திலே மெய்யன்பு வைத்து அரசனுடைய அமைச்சுரிமைத்தொழிலையுங் கைவிடாதவராய் ஒழுகிவந்தார்.

அப்போது ஒருநாள் அரிமர்த்தனன் இவரை மிக்க பொருள் கொண்டுபோய் உத்தமமான அசுவங்களை வாங்கி வருமாறு அனுப்பினன். அங்ஙனமே செல்கின்றவர் வழியில் திருப்பெருந்துறையில் சிவாலய தரிசனஞ் செய்கையில் ஆல யத்தின் புறத்தில் ஒரு குருந்த மரத்தின் அடியில் மாணுக்கர் கூட்டஞ்சூழ ஞானசிரியர் ஒருவர் எழுந்தருளி யிருப்பதைக் கண்டு வணங்கினர். அந்தப் பரமாசாரியரும் திருவாதவூர ருடைய ஒழுக்கத்தையும் அன்பையுங் கண்டு, உடல்பொருள் ஆவி மூன்றையும் அவர் தத்தஞ்செய்ய ஏற்று அவரைச் சிவ சொரூபமாக்கினர். அவ்வளவிலே வாதவூரர் மனமுருகி அன்புரையினராய்த் தம்வசமிழந்து பரமாசாரியரை வணங்கித் தோத்திரஞ்செய்தார். பழுதில்லாத சொற்களாலாகிய மணிக ளாம் அன்பாகிய வடத்தாற் கோத்த பாமாலையான தோத் திரங்களைக் கேட்டு மகிழ்ந்து சிவபெருமானுன அந்தப் பர மாசாரியர் இவருக்கு மாணிக்கவாசகர் எனச் சிறப்புப் பெயர் அளித்து, "இங்கே நீ செய்ய வேண்டிய கருமஞ் சிறிதுண்டு. ஆதலால் சிலகாலம் இங்கிருப்பாய்" என்று கட்டளையிட்டு மறைந்தருளினர்.

மாணிக்கவாசகர் குதிரைவாங்கக் கொண்டுவந்த பொருள் களை ஆலயத்திருப்பணிகளுக்கும் அடியார்களுக்கும் உபயோ கித்து விட்டுத் திருப் பெருந்துறையிலே இருந்தார். குதி ரைவாங்காத செய்தியைத் தூதரால் உணர்ந்த அரசன் அவ ரை வரவழைத்து நிர்ப்பந்தித்து ஒறுக்கலானன். சிவபெரு மான் காட்டிலுள்ள நரிகளைப் பரிகளாக்கிக் கொண்டுவந்து காட்டின அளவிலே அரசன் மகிழ்ச்சியடைந்து, அன்றிரவிலே அப்பரிக ளெல்லாம் மீண்டும் நரிகளாகி நகரத்தில் சேதம் விளைப்பதறிந்து, மீண்டும் மாணிக்கவாசகரை ஒறுக்கத் தொ

டங்கினன். அப்போது வைகையாறு பெருகும்படி செய்து சிவபெருமான் தானும் ஒரு கூலியாளாக வந்து அணைகட்டும் போது, பரபரப்பாக வேலை செய்ய வில்லையென்று அரசன் அவர்க்குக் கசையடி கொடுக்க, அவ்வடி அனைவர்மீதும் தன் முதுகின் மீதும் தழும்பேறியதைக்கண்ட அரசன், அச்சுற்று மாணிக்கவாசகரை நமஸ்கரித்து, அவரைத் தமது போக்கிலே விட்டுவிட்டான்.

மதுரையினின்றும் புறப்பட்ட மாணிக்கவாசகர், பலதிரு ப்பதிகளையும் வணங்கிக்கொண்டு, திருவண்ணாமலையில் சில காலம் தலவாசம் செய்துகொண்டிருந்தார். அப்போது அங்குள்ள பெண்கள் விடியற்காலத்திலே எழுந்து சிவதோத் திரஞ்சொல்லிக்கொண்டு அயல் வீட்டுப்பெண்களை யெழுப்பி நீராடப்போதலைக் கண்டு, அச்செயலைச் சிவசத்திகள் சிருஷ் டியின் பொருட்டு ஒருவரை யொருவர் எழுப்புவதாகப் பா வித்துத் திருவெம்பாவையைப் பாடினர். இப்படியே புறத் தே நிகழுகின்ற செயல்களாகிய படையெழுச்சி சாழல் பொற்சுண்ணம் முதலியவைகளெல்லாம் சிவஞானச் சே யல்களாகப் பாவித்துப் பாடியருளினர். பிறகு திருவண்ணா மலையினின்றும் சிதம்பரஞ் சென்றடைந்து சபாநாயகரைத் தரிசித்துத் திருவாசக மருளிச்செய்து துதித்துக்கொண்டு சிலநாளிருந்து, அப்பால் சிதம்பரத்துக்குக் கிழக்கேயுள்ள தபோவனத்தையடைந்து சிவானந்தச் செல்வராய்ச் சிவயோ கத்திலமர்ந்திருந்தார். அங்கிருக்கும்போது, ஈழமண்டலத் தினின்றும் வந்த புத்தர்களோடு வாதுசெய்து வென்று, பிற வி தொடங்கி ஊமையாயிருந்த சோழராசனுடைய மகளை ஊமை தீர்த்தருளினர்.

இங்ஙனம் சுவாமிகள் தபோவனத்தில் இருந்தபோது ஓரந்தணர் தம்மிடம் வரக்கண்டு, அவரை வீற்றிருக்கும்படி செய்து, "தேவரீர் இங்குற்ற காரணம் யாதோ?" என்று கேட்டார். வந்தவரும் "சுவாமிகளுடைய அற்புதங்களைக்

கேட்டு மதுரையில் நின்றும் வருகின்றோம்; தேவரீர் பாடியருளிய திருவாசகத்தை எழுதிக்கொள்ளும் விருப்பமுடையோம்" என்று குறிப்பித்தார். அங்ஙனமே திருவாசகத்தை ஏட்டி லெழுதிக்கொண்ட பிறகு, அவ்வந்தணர் "சுவாமி! திருச்சிற்றம்பல முடையாரைப் பாட்டுடைத் தலைவராக வைத்து ஒருகோவைப் பிரபந்தம் பாடிக்கொடுக்கவேண்டும்" என்று விண்ணப்பித்தார். அவ்வேண்டுகோளின் படியே மாணிக்கவாசகர் திருச்சிற்றம்பலக் கோவையார் பாட, அதனையும் எழுதிக்கொண்டு அந்தணர் அந்தர்த்தான மாயினர். அவ்விரண்டையும் கொண்டுபோய்த் திருச்சிற்றம்பல முடையார் மைக்காப்பிட்டு அவற்றைச் சிற்சபையின் வாயிற்படி மீது வைத்தருளினார். அவ்வதிசயத்தைக் கண்டதில்லைவாழந்தணர்கள் அவ்விரண்டு நூல்களையும் ஓதி முடிக்கையில் இறுதியில் "இது மாணிக்கவாசகர் சொல்ல அழகிய திருச்சிற்றம்பல முடையார் கையெழுத்து" என்றிருக்கக் கண்டு ஆனந்த பாவசராயினர். பின்பு பொருளை யறிய வேண்டிப் பொட்டெனை எழுந்து மாணிக்கவாசக ரிடஞ் சென்று பொருள் வினவ, அவரும் இவர்களை அழைத்துக் கொண்டு சிற்சபையை அடைந்து சிற்றம்பல முடையாரைக் காட்டி "இதுதான் இதன்பொருள்" என்று சபையிலே தில்லை மூவாயிரவருங் காண அங்கே தோன்றிய சோதியில் மறைந்தருளினார். அப்போது அவர்க்கு வயது முப்பத்திரண்டு

இவர் சித்தமுஞ் செயலும் சிவன்பாலே வைத்தவர் என்பது

எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்கிப் பரிசே யெமக் கெங்கோ னல்குதியேல்
எங்கெழிலென் ஞாயிறெமக்கு

என்றாற் போன்ற திருவாக்கான் உணரப்படும். இவருடைய பாடல்களில் அனேகம் ஞானத்தை யுள்ளிட்ட உருவகங்களாக இருக்கின்றன.

வையக மெல்லா முரலதாக மாமேரு வென்னுமுலக்கை நாட்டி
மெய்யனு மஞ்சணிறைய் வட்டி மேதகு தென்னன் பெருந்துறை (யான்
செய்ய திருவடி பாடிப் பாடிச் செம்பொ னுலக்கை வலக்கைபற்றி
ஐயனணிதில்லை வாணனுக்கே யாடப்பொற் சுண்ணமிடித்து நாம்

என்பது தாரணம்.

தாமே தமக்குச்சுற்றமும் தாமே தமக்கு விதிவகையும்
யாமாரெமதார் பாசமாரென்ன மாயமிவைபோகக் [கொண்டு
கோமான் பண்டைத்தொண்டரொடு மவன்றன் குறிப்பே குறிக்
போமாறமைமின் பொய்ந்நீக்கிப் புயங்களுள் வான் பொன்
னடிக்கே.

என்றாற்போலவன உபநிடதங்களாகக் கொள்ளற்பாலனவாக இருக்கின்றன.

மாணிக்கவாசகரைப் பற்றிய குறிப்புக்கள் கல்லாடத்தில் வருதலால் சிலர் மாணிக்கவாசகர் சங்கத்துக்கு முற்பட்டவென்றும் சங்கக்காலத்தவரென்றுங்கொள்வர். கல்லாடம் சங்கநூலன்றென்றும் சங்கத்துக்குச்சிலகாலம் பிற்பட்டதென்றும் பல வித்துவான்கள் யூகிக்கின்றமையால் இது துணியலாவதன்று. சம்பந்தமூர்த்திகள் காலத்தவரான திருநாவுக்கரையர் தமது தேவாரத்தில் நரிபுரியாக்கிய அற்புதத்தைக்குறித்திருத்தலால் அவருக்கு முற்பட்டவர் என்பது துணியலாம். "உயர்மதிற் கூடலினுய்ந்த வொண்டீந்தமிழின் றுறைவாய் நுழைந்தனையோ" எனத்திருச்சிற்றம்பலக்கோவையில் வருதலால் மாணிக்கவாசகர் சங்கத்துக்குப் பிற்பட்டவர் என்பது போதரும். ஆகவே கி-பி மூன்றுவது நான்காவது நூற்றூண்டிலிருந்தவரென்று அனுமானிக்கலாம்.

தென்னவன் பியமராயன் என்பது மாணிக்கவாசகருக்கு மற்றொரு பெயர். இதன் பொருள் பாண்டியனது பிராமணர்களின் அரசனென்பது. திருவாதவூரர் புராண

மென்னும் நூலில் இவர் சரித்திரம் கூறப்பட்டுள்ளது. இதை ப்பாடியவர் கடவுள் மகாமுனிவர். திருவாசகம் 8-வது நூற்றூண்டில் பாடப்பெற்ற தென்பது மேற்கு நாட்டார்களின் கொள்கை.

அருள்வாதவூரற்கு செப்பிய நாலெட்டினில் தெய்வீகம் எனும் பழம்பாட்டின்படி இவர் 32 வயது யிருடனிருந்தார். இவரை மந்திரியாய்க் கொண்ட அரிமர்த்தன பாண்டியன் காலம் கிறிஸ்தாப்தம் 500 க்கும் 800, க்கும் இடைப்பட்ட காலமாதலின் அதற்குள்பட்டகாலந்தான் இவர்காலம். இவர் பாடிய திருவாசகம் தமிழ்வேதமென நான்காவது வருணத்தினுள்ளார் கொண்டாடுகின்றனா. இவா பாடிய திருச்சிற்றம்பலக்கோவையாரின் சிறப்பு பின்வரும் கலித்துறையால் விளங்குகின்றது. இது பிற்காலத்தவர் பாடியது.



கலித்துறை.

வருவா சகத்தினின் முற்றுணர்ந் தோனை வண்டில்லை மன்னை, திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்ப லப், பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத், தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பவரே.

இவர் இலங்கையிலிருந்து வந்த புத்தர்களை வாதில் வென்று ஊமையாக்கின ரென்பது கர்ணபரம்பரை. இவர் பேசுவித்த ஊமைப்பெண்ணின் தாய் தகப்பன்பேர் இப்பொழுது புலப்படவில்லை. திருவாசகம் பத்தியை விளக்கும் சிறந்த நூலேயாம் "திருவாசகத்தில் உருகாதார் ஒரு வாசகத்திலும் உருகார்" என்பது பழமொழி. இவர் 32 வது வயதில் சிதம்பரத்தில் தேகவியோகமாயினர். திருக்கோவையார்க்குப் பேராசிரியர் சிறந்த உரைசெயதுள்ளார் நம்மாழ்வாராம் சடகோபர் பாடியருளிய திருவிருத்தம்போல் திருகோவையாரும் காமச்சுவை வகையாய்ப் பத்தியை விளைப்பதாகின்றது. சிருங்காரத்தால் பத்திபரிணாமம் காட்டப்படுகின்றது.

இவர் சைவர்கள் போற்றும் நான்கு சமயகுரவர்களுள் ஒருவர்.

மெய்ஞானத்தாழிசை யென்னும் ஓர் வெகுசிறிய நூல் மாணிக்கவாசகர் குருந்தமரத்தடியில் பெற்ற உபதேசமார்க்கத்தை வாசியோகவழியாய்க் காட்டுகின்றது. இதை மாணிக்கவாசகர் பாடியுள்ளாரென்று அச்சுப்பிரதியிற் காட்டப்பட்டுள்ளது. இதற்குப்போந்த ஆதாரங்கள் கிடைக்கவில்லை. பிற்காலத்தார் பாடி மாணிக்கவாசகர் பெயரை அதிற்சார்த்தினர் போலும். உபதேசமார்க்கத்தை யாரும் வெளிப்படையாய்ச் சொல்வதில்லை. இது தமிழ் நாட்டு வழக்கு.



சைவவைணவர்களின் சமயாசாரியர் நாயன்மார் ஆழ்வார்களின் தமிழ்ப்பிரபந்தங்களில் தெய்வபக்தியும் மனஉருக்கத்தோடுகூடிய அகங்காரமின்மையும் வைராக்கிய விருப்பமும் காணப்படுகின்றன. இவ்விதமான மூர்த்திவடிவத்தை யொட்டிய தியான நெறிவடமொழி வேதத்திலும் உபநிடதத்திலும் காணப்படவில்லை யென்பது சிலர் கொள்கை. இந்நெறி புராணகாலத்திற்குப் பிற்பட்டதாகையால் வேதம் உபநிடதங்கள் வழங்கியகாலத்தில் நடைபெறும்நெறியாகின்றதில்லை. இதுகால நிலைகருதி மூர்த்தித்தியானவகையால் பத்திப் பயிரை வளர்க்கப் பிற்காலத்தவர் காட்டிய நெறியேயாம். இதன்றி ரிக்வேதத்தினுல் அதுவழங்கிய அக்காலத்தில் ஆலயங்களில் தெய்வவழிபாடு நடைபெறவில்லையென்றும் காணப்படுகின்றது.

### கிளிப் பாட்டு.



(1) ஏரா ரிளங்கிளியே ! எங்கள் பெருந்துறைக் கோன்
சீரார் திரு நாமந் தேர்ந்துரையாய்,—ஆரூரன்
செம் பெருமான் வெண்மலரான், பாற்கடலான், செப்
எம்பெருமான் தேவர்பிரான் என்று ! [புவபோல்

(2) ஏதமிலாஇன் சொல் மரகதமே ! ஏழ் பொழிற்கும்
நாதன்மை ஆளுடையான் நாடுரையாய் ; காதலவர்க்
கன் பாண்டி மீளா அருள்புரிவா னாடென்றும்
தென் பாண்டி நாடே தெளி !

(3) தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் ! நமையாளும்
மாதாடும்பாகத்தன் வாழ்பதிஎன் ? கோதாட்டிப்
பத்தர் எல்லாம் பார்மேற்சில புரம்போற் கொண்டாடும்
உத்தரகோச மங்கைஊர் !

(4) செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீ நஞ்சிந்தைசேர்
ஐயன், பெருந்துறையான் ஆறுரையாய் ; தையலாய்
வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காண்உடையான் ஆறு.

(5) கிஞ்சுகவாய் அஞ்சுகமே ! கேடில் பெருந்துறைக் கோன்
மஞ்சள் மருவு, மலை பகராய் :—நெஞ்சத்
திருள் அகலவாள்வீசி இன்பம் அரு ளுந்தி
அருளு, மலை என்பது, காண், ஆய்ந்து.

(6) இப்பாடே வந்தியம்பு கூடு புகல் என்கிளியே
அப்பாடாச் சீருடையான் ஊர்வதென்னே ? எப்போதும்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப்பெண் ணேத்
வான் புரவி ஊரு மகிழ்ந்து ! [திசைப்ப

(7) கோற்றேன் மொழிக் கிள்ளாய் ! கோதில் பெருந்துறைக்
மாற்றாரை வெல்லும் படை பகராய் ; ஏற்றார் [கோன்
அழுக்கடையா நெஞ்சுருகமும் மலங்கள்பாயும்
கழுக்கடை, காண், கைக்கொள் படை

(8) இன்பான் மொழிக்கிள்ளாய்எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பான் முழங்கு முரசியம்பாய் :—அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின் பத்தோங்கும்
பழுமிக்க நாதப்பறை.

(9) ஆய மொழிக்கிள்ளாய் ! அள்ளூறும் அன்பர்பால்
மேய பெருந்துறையான் மெய்த்தார் என் ?—தீயவினை
நாளும் அணுகாவண்ணம் நாயேனை ஆளுடையான்
தாளியறு காம் உவந்ததார்.

(10) சோலைப்பசுங் கிளியே ! தூ நீர் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியுங் கொடி கூறாய் :—சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல் விளங்கி ஏர்காட்டும்
கோதிலா ஏறங்கொடி.

# புகழேந்திப் புலவர்.



புகழேந்திப் புலவர் பாண்டிநாட்டில் வேளாளர் குலத்தில் பிறந்து தமிழ்க்கல்வியிற் றேர்ந்து புலவர்களுக்குத் திலகம்போன்றவராய் இருந்தும் அவருடையவரலாறு குறைதீர விளங்கவில்லை வெண்பாவென்னுஞ் செய்யுளியற்றுவதில் பேர்பெற்றவரா யிருந்தன ரென்று இவரை வரகுணபாண்டியன் தன் சமஸ்தான வித்துவானா யிருக்கும்படி வேண்டிக் கொள்ள அவ்வாறே யிருந்து அரசன் சபைக்கு வருகின்ற புலவர்களெல்லோருக்கும் இதமே செய்துகொண்டிருந்தனர் என்பது மாத்திரம் தெரியவருகிறது.

அவ்வாறிருக்கு நாளில் வரகுணபாண்டியனுக்கு ஒரு மகள்பிறந்தனள். அம்மகளுக்குப் புகழேந்திப் புலவரால் கல்விப் பயிற்சி செய்வித்துச் சோழநாட்டரசனாகிய குலோகத்துங்க சோழனுக்கு விவாகஞ்செய்து கொடுத்துப் பலசீதனப் பொருள்களோடு புகழேந்திப் புலவரையுங் கொடுத்தனன். அம்மகளுடன் குலோத்துங்க சோழனது இராஜதானியாகிய உறையூரில் வசித்துக் கொண்டிருந்தனர். அங்ஙனமிருக்குங் காலத்தில் ஒருநாள் அரசனது பட்டத்தியானை கால்சங்கிலியை யறுத்துக்கொண்டு நிற்க அதுகண்டு அந்தச் சமஸ்தானத்து வித்துவானாகிய ஒட்டக்கூத்தப்புலவர் சோழனை உயர்த்திப் பாண்டியனைத் தாழ்த்தி ஒரு செய்யுட் சொல்லினர். அதாவது,

"இன்னங்கலிங்கத்திகல்வேந்தருண்டென்றோ
தென்னன்றமிழ்நாட்டைச்சீறியோ—சென்னி
யகளங்காவுன்றனயிராவதத்தி
னிகளங்கால்விட்டநினைவு."

இச்செய்யுளைக்கேட்டலும் புகழேந்திப்புலவர்

"தென்னவன் றென்னர் பெருமான் றிருமதுரை,
முன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்—பொன்னிநா

டாவிக்கும் வேந்தா மபயகு லன்மகளிர்
தாலிக்குமொன்றே தனி."

என்றுபாண்டியனை யுயர்த்திச் சோழனைத் தாழ்த்தி இச்செய்யுளைச் சொல்லினர். அதுகேட்ட ஒட்டக் கூத்தப்புலவர் புகழேந்திப் புலவரிடத்துப் பொறாமை கொண்டன ராயினர்.

பின்பு புகழேந்திப் புலவர் முரணைநகரத்திற் சிற்றரசாயிருந்த சந்திரன் சுவர்க்கி என்னும் அரசன் வேண்டுகோளால் நளசக்கரவர்த்தியின் சரிதத்தை வெண்பாக்களினால் பாடி நளவெண்பா எனப் பெயரிட்டு அந்நூலை அரங்கேற்றும்பொழுது, ஒட்டக்கூத்தப் புலவரும் வந்து கேட்டுக் கொண்டிருக்கப், புகழேந்திப்புலவர் அந்நூலில் மாலைக்கால வருணனையாகிய

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கரும்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப-முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது

என்ற செய்யுளைப் பிரசங்கிக்க ஒட்டக்கூத்தப்புலவர் தாம் கொண்ட அழுக்காற்றின் மிகையால், தேனை ஒழுகவிட்டு அழுக்கைப்பற்றிக் கொள்ளும் பன்னாடையைப் போல், குணத்தைக்கொள்ளாது குற்றசிதமாய் "மல்லிகையைச் சங்காகச் சொல்லியது பொருந்தும். வண்டை ஊதுபவனாகச் சொல்லியது ஒவ்வாது. சங்கையூதுபவன் அடியை வாயில் வைத்தூதல் முறையேயன்றி நுனியை வைத்தூதல் வழக்கன்று" எனத் தூர்வாதஞ்செய்தனர். அதுகேட்டுப் புகழேந்திப்புலவர் விநயமாய்க் கட்குடிக்கிறவனுக்கு வாயென்றும் அபானமென்றும் வேறுபாடு தெரியாதென்று சமையோசிதமாய் விடைபகர்த்தனர். அது கேட்ட வச்சபையோர் வியந்து புகழேந்திப் புலவரை அவமதிக்கவந்த ஒட்டக் கூத்தப்புலவர் தாமே யவமதிப்புற்றன ரென நகைத்தனர்.

பின்பு புகழேந்திப்புலவர் அந்நூல் முழுவதையும் புலவரியாவரும் களிதூங்க அரங்கேற்றி முடித்தனர்.

அதனால் ஒட்டக்கூத்தப்புலவர் புகழேந்திப் புலவரிடத்து முன்னிலும் மிக்க பொறாமையுற்றுப் பகைமைகொண்டு எவ்விதத்தாயினும் இப்புகழேந்தியைச் சிறையில் வைத்து அவமதிப்புச் செயயவேண்டுமென் றெண்ணங் கொண்டிருந்தனர்.

அப்படி யிருக்கும்பொழுது ஒருதினத்தில் பொய்மையாய் ஓர்குற்றத்தைப் புகழேந்திப் புலவர் செய்ததாக் கற்பித்து அரசனிடஞ் சொல்ல, அரசன் அதனைத் தீர்க்கமாய் விசாரியாது ஒட்டக்கூத்தப் புலவரிடத் துள்ள அபிமானத்தால் புகழேந்திப் புலவரைச் சிறையிலடைவித்தனன்.

அப்புகழேந்திப் புலவர், இதுவும் ஊழ்வலியின்றிறனென்றோர்ந்து, அங்கிருந்து உணவின்றிவருந்திப் பாரதகதையிற் சில பகுதிகளை எளிய நடையில் கண்ணிகளாகப் பவளக்கொடிமாலை முதலிய சில நூல்களை இயற்றிப் பாடிக்கொண்டிருந்தனர். அவற்றை அச்சிறைச்சாலையின் பக்கவழியாய்த் தண்ணீர்க்குச் செல்லும் மாதர்கள் கேட்டுச் சாளரத்தின் வழியாய்ப்பார்த்துப் பரிதாபமுற்று அரிசி காய் முதலிய உணவுப்பொருள்களைக் கொடுக்க அவற்றைப்புகழேந்திப்புலவர் சாளரத்தின் வழியால் வாங்கிச் சமைத்துண்டிருந்தனர்.

அவ்வாறிருக்குங் காலத்தில் ஒருநாள் இரவில் குலோத்துங்க சோழன் வருடத்தில் ஒருமுறை ஒட்டக் கூத்தப் புலவரை யானையின் மேலேற்றி அவரடி தன்முடியின்மேல் படும்படி தான் கீழிருந்து குடைபிடித்துக்கொண்டு யானையை நடத்தி ஊர்வலம் வரும் வழக்கத்தின்படி ஆடம்பரங்களுடன் வீதியில் உலாவருவதைச் சிறைச்சாலையிலிருக்கின்ற புகழேந்திப்புலவர் சாளரத்தின் வழியால் பார்த்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது அப்பவனியைக்கண்ட பலரும்

"அற்பர் அர்த்தராத்திரியில் குடைபிடிக்கச்செல்வர்" என்னும் பழமொழியைச் சொல்லக் கேட்டு அரசன் ஒட்டக்கூத்தப் புலவரை நோக்கித் "தேவரைநக்கன்றி இரவில் குடை நிழலிற் செல்லல் நமக்குத் தகுமா" இதற்கு நீர் நியாயம் சொல்வீர்? என்று கேட்க, அதற்கு அவர் விடை யொன்றும் சொல்ல வில்லை.

அதற்கு அருகில் எட்டிப் பார்த்துக்கொண்டிருந்த புகழேந்திப்புலவர் அரசனை நோக்கி

" அண்ட மீதுலவி வாழு மருந்ததிக் கற்பாளுன்னைக்
கண்டதா லுவகை யெய்திக் கற்பழிந் திடுவ ளென்றே
யெண்டிசை புரக்கும் வேந்தே யிரவினிற் கவிகை நீழல்
கொண்டுமா நடாத்து மாறு குலோத்துங்கா நீதி தானே "

என்ற செய்யுளைச் சொல்லினர். அதைக்கேட்ட குலோத்துங்க சோழன் அதிசயித்துச் சாளரத்தின் வழியால் பார்த்துப் புகழேந்திப்புலவரெனத் தெரிந்து தன் கைகளால் அவரைத்தூக்கித் தளையை நீக்கி யானையின்மேல் ஒட்டக்கூத்தப் புலவரோடு சேர்த்து வைத்துக்கொண்டு அரண்மனைக்குச் சென்றனன்.

அங்ஙனம் நிகழ்ந்தவற்றை யெல்லாம் அரசன் மனைவியாகிய பாண்டியன் மகள் கேள்வியுற்றுத் தன் குருவாகிய புகழேந்திப்புலவரைச் சிறையிலடைத்திருந்ததை நினைத்து மிகவருந்தி நாயகனது நீதிவழுவால் இப்பிழை நேர்ந்ததென்றெண்ணிக் கோபங்கொண்டு, தன் னரண்மனை வாயிற்கதவைச் சார்த்தி ஒருதாளிட்டுக் கொண்டிருந்தனள். அரசன் புகழேந்திப் புலவரை அநீதியாய்ச் சிறையி லடைத்தமையைக்கருதி மனம்நொந்து அவ்விருபுலவரையும் கூட அழைத்துக் கொண்டு தன் மனைவியின் அந்தப்புர வாயிலுக்குச் சென்றனன். அக்கதவும் சார்த்தியிருப்பதைக்கண்டு மனைவி மிக்ககோபத்தால் கதவடைத்துக் கொண்டிருக்கின்றாளெனத்

தெரிந்து, ஒட்டக்கூத்தப் புலவரை நோக்கி அவள் கோபந் தணிந்து கதவைத்திறக்கும்படி நயமாக ஒரு செய்யுள் பாடுக வெனச்சொல்ல, ஒட்டக்கூத்தப்புலவர்,

" இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்து வள்ளைக்
குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகை மானாபரணனின் வாயில்வந்தாற்
பிழையொன் றிரண்டு பொறுப்பதன் றோகடன் பேதையர்க்கே."

என்றசெய்யுளைச் சொல்லலும், பாண்டியன் மகள் அச்செய்யுளைக்கேட்டுக் கதவைத்திறவாது உள்ளிருந்தே 'கூத்தரே உமது இனத்தார் தொழில்முறைக்குத் தக்கபடி " இழை " என்றெடுத்துக் கொண்டீர்போலும். மனம்வருந்தி அழுது கொண்டிருக்கும் என்கண்களைக் " குழையொன்றிரண்டு விழி ,, என்றுசொல்லியது சமயோசிதமோ. உடன் "கோபந்தணி ,, என்றதும் அருவருப்பன்றோ ? " மழைக்கையு மானாபரணன் ,, என்றது இவ்வரசனை மட்டுங் குறிக்குமோ ? " பேதையர்க்கு" என்றது தகுதியா ? 'என்றுசொல்லி மறுத்து மிகச் சினந்து "ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு ரட்டைத்தாள்' என்றுகூறிப் படக்கென இரண்டாவது தாழுமிட்டனள். அதுகண்ட வரசன் புகழேந்திப்புலவரை நோக்கி நீர் ஒரு செய்யுள் சொல்லுமினென வேண்டப் புகழேந்திப்புலவர்.

" நானே யினியுன்னை வேண்டுவதில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடுவாய் திறவாவிடிலோ
வானே றனைய விரவிகுலாதிபன் வாயில்வந்தாற்
றானே திறக்குநின் கைத்தலமாகிய தாமரையே.

என்றசெய்யுளைப் பாடியவுடன் பாண்டியராசன் மகள் கதவைத் திறந்துவிட்டுத் தன்னாசிரியராகிய புகழேந்திப்புலவரை வணங்கினள். புகழேந்திப் புலவர் தமது ராஜகுமாரிக்கு ஆசீர்வதித்துச் சோழராசன் அனுமதிபெற்றுத் தன்வீடு

திக்குச் சென்றனர். பின் ஒட்டக்கூத்தப் புலவரும் வீட்டிற்குச் சென்று உள்ளம் நொந்திருந்தனர்.

பின்பு அரசனும் அவன் மனைவியும் உள்ளங்கலந்து புகழேந்திப்புலவர் சிறைப்படும்படி நேர்ந்தமையைக் குறித்து வருந்தி, ஒட்டக்கூத்தப் புலவர் புரட்டினால் நேர்ந்ததென்றும் அவர் தாழ்ந்தகுலத்தின ரென்றும் தெரிந்திருந்தும், அவரையும் ஓர் புலவரென மதித்தனராயிருந்தனர்.

பின்பொரு நாள் அவ்வூரிலுள்ள வாணியப் பெண் ஒருத்தி அப்புலவர் இருவருள் புகழேந்தியை மதித்துப்புகழ்ந்து ஒட்டக்கூத்தப்புலவரை இகழ்ந்தனள். அதனை ஒட்டக்கூத்தப்புலவர் அரசனிடம் சொல்ல அரசன் அப்பெண்ணை அழைப்பித்து வினவினன். அவள் அரசனைநோக்கி "உனது குடைக்குள் அடங்காதவை இவ்வுலகத்தில் இரண்டுள்ளன. அவைகளை இப்புலவரிருவருள் இன்னவையென்று சொல்லும் புலவரை உயர்ந்தவ ரெனத் தெரிந்து கொள்க. நான் உணர்ந்திருக்கின்றேன்" என்றனள். உடனே அரசன் அவ்விருபுலவரையும் அழைப்பித்து அவரை நோக்கி அப்பெண் சொல்லிய இரண்டையும் இன்னவையெனச்சொல்லீரெனக் கேட்க, ஒட்டக்கூத்தப் புலவர் ஒன்றுந் தோன்றாது சும்மாவிருந்தனர். புகழேந்திப் புலவர் "சோழமகாராசனே! மேருமலையின் சுற்றிட முழுதும் விரிந்து கவிந்து நிழல் செய்யும் உனது புகழ்க் குடைக்குள், உனது பகைவர் தலைத்துண்டங்களும் உன்புயங்களை விரும்பும் மாதர் விரகமும் அடங்காதனவாம்" என்னும் பொருளுள்ள செய்யுளைச் சொல்லினர். அதுகேட்டு அச்சபையிலுள்ள புலவர் யாவரும் அரசனும் மகிழ்வுற்றனர்.

பின்பு ஒட்டக்கூத்தப் புலவர் அரசனை நீங்கித் தன் வீட்டிற்குச் சென்று வெட்கி மனவருத்தத்துடன் உண்ணாது படுத்துக்கொண்டிருந்தனர். அவர்மனைவி போசனஞ் செய்ய

அழைக்க, வேண்டுவதில்லை யென்று மறுத்தனர். அது கேட்ட அம்மாது பாலைக்கொண்டுவந்து கொடுக்க அதற்கு ஒட்டக்கூத்தப் புலவர் "உன்பாலும் வேண்டாம்: புகழேந்தி வெண்பாவை அதில் பிழிந்து தரினும் வேண்டாம்" என்று சொல்லியதைக் கேட்ட புகழேந்திப் புலவர், நாம் இதுவரை ஒட்டக்கூத்தப்புலவரைப் பகைவரென நினைத்தது பெரும் பிழை. நமது செய்யுட் சுவையை உணர்ந்தவ ரிவரே. நமது பெருமையை விளங்கச்செய்பவரும் இவரே, என்று வியந்து உள்ளம் மகிழ்ந்து, ஒட்டக்கூத்தப்புலவரோடு பகைமை நீங்கி மிக்க நட்பினராய்க் கலந்து பின்பு பல நாள் வாழ்ந்திருந்து, இவ்வுலகவாழ்வை நீத்துத்திருமாலின் பதத்தையடைந்தனர்

வெண்பாவில் புகழேந்தியும் விருத்தப்பாவில் கம்பரும் இணையற்றவர் என்பது பிரசித்தமானவிஷயம். நளவெண்பா விலிருந்து இதனடியில் காட்டப் படுகின்றவைகளால் புகழே ந்தி வெண்பாப்பாடுவதில் புலி என்று விசேஷப்பெயர் வந்த தற்கு நியாயம் விளங்கும்.

காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் றளையவிழப்-பூமடந்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.

வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன-கஞ்சம்
கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு.

தெரிவனநூ லென்றுந் தெரியா தனவும்
வரிவளையார் தங்கண் மருங்கே-ஒருபொழுதும்
இல்லா தனவு மிரவே யிகழ்ந்தெவரும்
கல்லா தனவுங் கரவு.

நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்சா
ஆர்க்குஞ் சிலம்பே யணிமுரசா-வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு.

வில்லி கணைவிழுப்ப வெண்மதியஞ் சீரிழுப்பத்
தொல்லை யிருள்கிழியத் தோன்றினான்-வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று.

திக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே-அக்காலங்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு.

கார் பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
சீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ-பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்ப னெதிர்.

புகழேந்திப்புலவர் வெண்பாப் புலியென்பது நம்மவர் கருத்து. அதற்குப்பாடல்

ஆசிரிய விருத்தம் - முன்னோர்வாக்கு.

வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர்
சயங்கொண்டான் விருத்த மென்னும்
ஒண்பாவி லுயர்கம்பன் கோவையுலா
வந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
வசைபாடக் காள மேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்கா
சலாதொருவர் பகரொ ணாதே.

# ஒட்டக்கூத்தர்

---

இப்பரதகண்டத்தின் தென்பாகத்திலுள்ள தமிழ்நாடானது ஒருகாலத்தில் சேரதேசமென்றும், சோழதேசமென்றும், பாண்டியதேசமென்றும, மூன்று சிற்றரசுநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்த தென்று கேள்வியுற்றிருக்கிறோமல்லவா? இந்த மூன்றுநாட்டரசாட்சிகள் செழித்தோங்கியிருந்த காலத்தில் சமஸ்தான வித்வான்களென்று சிறந்தபுலவர்கள் அங்கங்கே இருந்தனரென்றும் சரித்திரங்களால் தெரியவருகிற தன்றோ? அவர்களுள் ஒட்டக்கூத்தர் என்பவர் உறையூரிலிருந்து அரசு செலுத்திய இராஜேந்திர சோழன் காலத்திலும் அவன்குமாரன் குலோத்துங்கசோழன் காலத்திலும் அரண்மனை வித்துவானாயிருந்தார். அதேகாலத்தில் பாண்டிய நாட்டின் இராஜதானியாகிய மதுரையில் செங்கோல் செலுத்திய வரகுண பாண்டியன் சமஸ்தானத்தில் புகழேந்திப்புலவர் வித்வானாயிருந்தார். இவ்விருவருடைய வரலாறுகள் ஐரோப்பிய பண்டிதர்களுடைய சரித்திரத்தைப் போல் பூரணமாய் இப்பொழுது வரிசையாகக் கிடைப்பது அரிது. ஆகிலும் கர்ணபரம்பரையாய்க் கேட்டவற்றை இங்கே தொகுத்துரைப்போம். "வானத்தின் கீழ பூரணமானது ஒன்றுமில்லை" என்னும் ஆன்றோர்வாக்கு நல்லோர் வல்லோர் விஷயத்தில் விளக்கமாவதென்றால் அதைக் கேட்போர் அனைவரும் கிலேசப்படத் தக்கதாயிருக்கிறது. ஆயினும் நாம் நவமாக ஒன்றைத் துணிந்து கற்பித்துக் கூறுவது உசிதமானதன்று. எது எப்படியிருந்தாலும் பூர்வகாலவித்வான்கள் தங்களுக்கு அந்தந்த அரசர்கள் கொடுத்த சம்மானமும் காணியாட்சிகளும் பெற்றிருந்த செருக்கினால் ஒருவரையொருவர் மதியாமல் பரஸ்பரம் பொறாமை பாராட்டி வாதிட்டுவந்தார்கள் என்பது மாத்திரம் அவரவர்களின் பாக்களால் தெரிய வருகின்றது.

ஒட்டக்கூத்தர் என்னும் புலவர் கம்பர் என்னும் கவிச் சக்ரவர்த்திக்கு எதிரியாய் இருந்தவ ரென்பதற்குக் கம்பர் இறந்தபோது,

"இன்றைக்கோ கம்பனிறந்த நாளென் கவிக
ளின்றைக்கோ ராசசபைக்கேற்குநா—ளின்றைக்கோ
பூமடந்தை வாழப்புவி மடந்தை வீற்றிருக்க
நாமடந்தை நூல்வாங்கு நாள்."

என்று ஒட்டக்கூத்தர் தனக்குள் நெடு நாளாயிருந்த குரோ தத்தை வெளியிட்ட பாட்டும் ஒன்றுண்டு. இந்த ஒட்டக் கூத்தர் செங்குந்தரென்னும் கைக்கோளர் ஜாதியில் பிறந் தவர். அந்த ஜாதியார்க்குத் தந்துவாயர் என்று ஒரு பெய ருண்டு. தந்து என்னும் வடமொழிக்குப் பஞ்சு நூலென்று பொருள். அந்தத் தந்துவை அறுந்து போகும் வேளை களில் வாயின் எச்சிலால் பிணைத்து நெய்கிறது கைக்கோளர் வழக்கமாதலால் அவர்களுக்கு, "இழைநக்கி நூல் நெருடும்" என்று திருவள்ளுவர் சொன்னபடி, தந்துவாயர் என்றும் பேருண்டாயிற்று. அந்த ஜாதியாருக்குச் சுப்பிரமணியரு டைய தம்பியாகிய வீரபாகுதேவர் தாம் மூலபுருஷர். இந்தக் கைக்கோளர் துணிநெய்யும் பொழுது கால்மாறிக் கால் மாறி மிதித்து நெய்யும் தொழிலைச் செய்வதால் இச்சாதியா ருக்குக் கூத்தர் என்றும் காரணப்பெயரா யிருக்கலாம்.

ஒரு காலத்தில் தம் வம்சத்தில் பிறந்தவரான ஒட்டக் கூத்தரிடத்தில் கைக்கோளர் ஒருங்கு சேர்ந்து வந்து "ஐயா புலவரே! நீர் எங்குலத்தில் பிறந்த புலவராயிருந்தும் நமது குலம் விளங்கும்படியான பாடல் ஒன்றும் நமக்குள் இல்லை யே. வேளாளர், வணிகர், வன்னியர் ஆகிய சாதியாருக்குப் பாடல்களிருப்பதுபோல நமது குலத்தாருக்கும் ஒருபாடல் நூல் இருக்கவேண்டாமா" என்று வேண்டிக்கொண்டார்கள். அதற்கு அவர் நீங்கள் கேட்க வேண்டியது தான்; நானும்

பாடித்தரவேண்டியது தான். ஆயினும் நமது பாட்டுக்கு யாது பரிசு அளிப்பீர்கள்" என, அவர்கள் அளவற்ற திரவியந் தருவோமென்றார்கள். அதற்கு ஒட்டக்கூத்தர் எனக்குச் சோழராஜன்கொடுத்த திரவியங்கள் வேண்டிய துண்டு; உங்கள் திரவியம் எனக்கு வேண்டுவதில்லை; உமது குலத்துதலைப் பிள்ளைகளின் தலைகள் எழுபது தருவீர்களாயின் நமது ஆயுதமான ஈட்டியைச் சுட்டி ஈட்டியெழுபது என்னும் கிரந்தம் பாடுவோம் என்றார். இதைக் கேட்டவுடன் செங்குந்தர்கள் காதுக்குள் நாராசங்காய்ச்சி விட்டதுபோல ஏங்கிப் பின்னிட்டார்கள். அப்போது ஒட்டக்கூத்தர் செங்குந்தர்களின் வமிச பரம்பரையினது பிரபாவங்களை யெடுத்து ஓதினார். அதைக் கேட்ட மாத்திரத்தில் செங்குந்தர்களுக்குச் சூரத்துவமும் ரோஷமும் உண்டாகித் தங்கள் கையாலேயே தம் தம் பிள்ளைகளின் தலைகளைக் கத்திகளால் அறுத்துக் கூடைகளில் சுமந்து கொண்டு ஒட்டக்கூத்தரிடம் வந்தார்கள். அப்போது அவற்றைப் பார்த்த புலவர் சோழமகாராஜன் திருவாசலின் முன்பு வையுங்கள் என்றனர். அப்படியே அவர்கள் அவற்றைக் கொண்டுபோய்க் குவிக்கச் சோழராஜன் அதைக் கண்டு, கூத்தரைக்கூவி, ஓய் கூத்தரே இதுஎன்ன கூத்தென்றுகேட்க, அது இன்னம் சிறிது பொழுதில் விளங்குமென்று சொல்லி, அப்புலவர் அந்தத்தலைகளைச் சிங்காசனமாகக் கொண்டு, அதன்மேலிருந்து ஈட்டிஎழுபது பாடி முடித்தார். அதன் கடைசியில் அந்தத்தலைகளும் ஒன்றுகூடி உயிர்த்தெழும்படி சரஸ்வதியை நோக்கி அவர் ஒரு பாட்டுப் பாடினார். அதாவது.—

"கலைவாணிநீயுலகி லிருப்பதுவுங் கல்வியுணர் கவிவல்லோரை
நிலையாகப் புரப்பதுவுமவர் நாவில்வாழ்வது நிசமேயன்றோ
சிலைவாணனுவிருந்தா யிரம்புயங் கடிணிந்து முயர்சிவ னூற்றான்
தலைபாவிகொடுத்திடுஞ்செங்குந்தருயிர் பெற்றிடநீதயைசெய்வாயே

என்பதாம். சரஸ்வதியை நோக்கி அப்பாடலைச் சொன்னவுடனே அங்கிருந்த தலைகளும் முண்டங்களும் ஒட்டிக்கொண்டு உயிர்பெற் றெழுந்தன. அப்பொழுது இப்புலவருக்கு முன்னிருந்த கூத்தரென்னும் பெயரோடு தலைகளும் முண்டங்களும் ஒட்டப்பண்ணின காரணத்தால் ஒட்டக்கூத்தரென்னும் பெயரும் சிரசிங்காசனாதிபதி யென்னும் பெயரும் அரசனால் அளிக்கப்பட்டன. அப்பொழுது ஒட்டக்கூத்தர் செங்குந்தரைப் புகழ்ந்து ஒருசெய்யுள் சொல்லினார். அதாவது:—

"நிலைதந்தா ருலகினுக்கு மியாவருக்கு மானமதை நிலைக்கத்தந்தார்
கலைதந்தார் வணிகருக்குச் சேனஞ்செய் திடவென்றே கையிற்றந்தார்
விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்த ரென்கவிக்கோர் விலையாகத்தான்
தலைதந்தா ரெனக்கு மொட்டக் கூத்தனெனப் பெயரினையுந்தாந் தந்தாரே."

இவ்வாறிருக்கையில் வரகுணபாண்டியன் மகளைக் குலோத்துங்க சோழனுக்கு விவாகஞ் செய்விக்கப்பட்டது. அப்போது அப்பெண்ணுக்குச் சீதனமாகத் தன்சமஸ்தான வித்வானாகிய புகழேந்திப் புலவரையுங் கொடுத்தான்.

அவர் சோழராஜனிடத்திலிருக்கும் பொழுது ஒட்டக்கூத்தர் தமது அரசனாகிய சோழமகாராஜனைப் புகழ்ந்து,

" இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ
தென்னன் றமிழ்நாட்டைச் சீறியோ—சென்னி
யகளங்க காவுன்றன் யிராவதத்தி
னிகளங்கால் விட்ட நினைவு."

என்றசெய்யுளைக் சொல்ல, அதைக்கேட்ட பாண்டியனது சமஸ்தான வித்துவானாகிய அப்புகழேந்திப்புலவர்

தென்னவன் றென்னர் பெருமான் றிருமதுரை
மன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்—பொன்னிநா
டாவிக்கும் வேந்தா மபயகுலன் மகளிர்
தாலிக்கு மொன்றே தளை."



என்றசெய்யுளைச் சொல்லி ஒட்டக்கூத்தர் பாடலைக்கண்டித்தனர். அதுமுதல் ஒட்டக்கூத்தருக்குப் புகழேந்திப்புலவரிடத்தில் பகை உண்டாயிற்று. பின்புஒருநாள் சோழராஜன் அவ்விருவரையும் அழைத்துக்கொண்டு தெருவில் உலாவப்போன தருணத்தில், ஔவையார் இரண்டுகாலையும் நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். சோழராஜனைக்கண்டவுடன் அவள் ஒருகாலை முடக்கினுள், பிறகு புகழேந்திப்புலவரைக் கண்டு மற்றொருகாலையு முடக்கினுள். ஒட்டக்கூத்தரைக் கண்டு தன்னிரண்டுகாலையும் நன்றுய் நீட்டிக்கொண்டாள். அதைக் கண்ணுற்ற ஒட்டக்கூத்தர் மனம் திடுக்கிட்டு, ஓ அம்மையே! நீ இவ்வாறுசெய்த காரணம் யாது கூறெண, அதற்கு அந்த அம்மையார், "அடாகூத்தா! சோழமகாராஜன் கிரீடாதிபதி யாதலால் ஒருகாலையும் புகழேந்தி புலவர் பெருமாறுதலால் மற்றொருகாலையு முடக்கிக்கொண்டேன், நீயோ முழுமூடனுன படியால் மறுபடியும் இரண்டுகாலையும் நீட்டினேன். நீயும் இந்தப் புகழேந்தியைப் போல வல்லமையுள்ளவனுனல் சோழனையும் சோழநாட்டையும்மதி என்னும் ஓர் பதம் மும்முறை வர ஒருபாடல் சொல்லுவாய்" என, ஒட்டக்கூத்தர் அதற்குச் சம்மதித்து

"வெள்ளத் தடங்காச்சினவாளை வேலிக்கமுகின் மிடறொடித்துத்
துள்ளிமுகிலைக்கிழித்து மழைத் துளியோடிறங்குஞ் சோணாடா
கள்ளர் மறவர் குறும்பகற்றுங் கண்டா கண்டர் பெருமானே
பிள்ளைமதியா லென்மாது பேதைமதியு மிழந்தாளே."

என்றுபாடினர். அதுகேட்டு ஔவையார் கைகொட்டிச் சிரித்து, "அடாஒட்டா ஒருமதிகேட்டாய்! உன்திறமை இது தானே; நன்று நன்று" என்று இழிவாய்ப் பேசி அங்கிருந்த புகழேந்திப்புலவரைப் பார்த்து, ஐயா! நான் சொல்லியபடி நீர் பாடும், பார்ப்போமென்றனள். அதற்கு அவர் இதோபாடுகிறேனென்றுபாடத் தொடங்கி

யங்கப்பழனத்தழுமுழவர் பலவின் கனியைப் பறித்த தென்று
சங்கிட்டெறியக் குரங்கிள நீர் தனைவிட்டெறியுந் தமிழ் நாடா
கொங்கற் கமராபதி யளித்த கோவே யமரர் குலதீபா [லே.
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப் பிறைக்கும் விழிமயி

என்று பாடினர். அதைக்கேட்டு ஔவையார் வியந்தனள். ஒட்டக்கூத்தர் முன்னிலும் அதிகமாகப் புகழேந்திப் புலவரிடத்துப் பகைமை கொண்டு அவரைத் தண்டிக்கக் கருதி அதற்குத் தக்க தருணத்தை எதிர்பார்த்திருந்தார். அவர் கருத்தின்படியே தக்க தருணம் ஒன்று வாய்த்தது. வாய்த்தவுடன் ஒட்டக்கூத்தர் புகழேந்திப் புலவரைப் பிடித்துச் சிறையில் வைத்துவிட்டார்.

பின்பு ஒட்டக்கூத்தர் கம்பரால் பாடப்பட்ட இராமாயணத்தின் ஆறுகாண்டங்களுக்குமேல் உள்ள உத்தரகாண்டத்தை விருத்தச் செய்யுட்களால் பாடி முடித்தனர். இதுவுமன்றிப் பற்பல கோவை உலா அந்தாதி முதலிய பிரபந்தங்களையு மியற்றினர். பின்பு ஒரு நாள் அவர் நோயினால் வருந்தித் தன்வீட்டில் ஆகாரமின்றிப் படுத்திருக்கையில் சிறையினின்று மீண்டு வந்த புகழேந்திப் புலவர் ஒட்டக்கூத்தரைக் கொல்ல நினைந்துவந்து ஒரு புறத்தில் ஒளித்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது ஒட்டக்கூத்தர் மனைவி, பால் கொண்டுவந்து குடிக்கும்படி வேண்ட, ஒட்டக்கூத்தர் வெறுத்து மனைவியை நோக்கி அப்பாலுடன் புகழேந்தி வெண்பாவைப் பிழிந்து கொடுத்தாலும் வேண்டுவதில்லை என மறுக்க, அதுகேட்ட புகழேந்திப்புலவர் ஓடிவந்து ஒட்டக்கூத்தரைத்தழுவிக் கொள்ள, இருவருங்கலந்து மகிழ்ந்து அளவளாவி இருந்து, சில நாட் சென்றபின் ஒட்டக்கூத்தர் முருகக்கடவுள் திருவடிகளை அடைந்தனர்.

இவர் பாடிய இராமாயணத்தில் உத்தரகாண்டத்தில் வருகின்ற சில பாடல்கள் ஒவ்வொரு நீதியைத் தெரிவிப்பதால் அவற்றுள் சிலவற்றை இங்கே எடுத்துக்காட்டுகிறோம்.

குலம்வேண்டுமென்றிருப்பார் குலத்துள்ளார்
கல்வியினாற் குறையாஞானப்
பலம்வேண்டு மென்றிருப்பார் தந்தைமார்
பரந்த பெருஞ் செல்வமுள்ள
தலம்வேண்டுமென்றிருப்பார் தாய்மார்கள்
யவ்வனமு நலமுஞ்சார்ந்த
நலம்வேண்டு மென்றிருப்பார் நாறுகுழல்
நங்கைமார் நலத்தின் மிக்கார்.

தந்தை தாயாரைத் தம்முனைச் சார்நெறி
அந்தணாளரைச் சீறு மறிவிலார்
இந்த லோகத்திரும் பழியெய்தி மேல்
அந்த லோகத்தரு நர கெய்துவார்.

மாசிலாத குடிப்பிறப்பு மானங் கீர்த்தி யிவைமாய
ஆசை நோயானது பெருக வணங்க சரத்தா லேவுண்டு
கூசலின்றிக் குலத்தவரைக் குலையச் செய்தார் குலத்தோடு
நாசமெய்திப் பழியோடு நரகமுறுவ ரெனவுரைத்தான்.

மெய்க்கொண்ட உள்ளத்து மேலோரே யாயிடினும்
பொய்க்கொண்ட சிந்தையா ரேனும் பொதுவாய
மைக்கொண்ட கண்ணார் மனைவிய ராகித்தம்மைக்
கைக்கொண்டிருந்தார்க்குத் தப்பக் கடனன்றால்.

உலகத்தாருள்ள தென்றதுள்ள தாமொலி நீர் வேலை
உலகத்தாரில்லை யென்றதில்லையா முணருங்காலை
உலகத்தாருள்ள தென்றதில்லை யென்றுரைக்கு மாகில்
உலகத்துக் கவன்பே யாகுமுண்மையாற் பயனொன்றில்லை.

இன்பத்திலிறுமாந்து தோன்றாக்கி யீன்றமத
துன்பத்தி லழுந்துவார் தொல்லுலகிலறியாதார்
இன்பத்துன்பங்களே யெய்திய போதிவை யெல்லா
முன்பற்று விடாத வினைப் பயனென்பார் முழுதுணர்ந்தோர்.

சிறிய மனத்தனாகிச் சிறந்த செங்கோலை விட்டுக்
கூறுவெம்பழியை நாடிக்குலைந்திடக் கொடுங்கோலோச்சி
ஆறிலொன்றிறை கொள்கின்ற தல்லவையாற்றிடாதே
ஏறிறைகொள்வோனட்டி லிருப்பவர் மூடரென்றான்.

தண்டிக்கப்படுவோர் தம்மைத் தண்டியாதொழித்து விட்டுத்
தண்டிக்கப்படாதோர் தம்மைதண்டிக்குந் தரணி மன்னன்
எண்டிக்கும் பரந்து மூடுமிரும் பழியெய் தித்தீயோர்த்
தண்டிக்குந் தருமனாலே தண்டிக்கப்படும் பினென்றான்

நந்தடியயற்ற வாலநடுங்கி வீழ்கின்ற தென்று
வந்த வீழ்வன்றி வீழாவகைகிலே விளக்குமாபோல்
மைந்தர்க டமக்கு நல்ல வறிவினான் மகிழ்ந்துசேர்ந்து
தந்தையைத் தளரா வண்ணந் தாங்குவர் தவத்தினென்றான்

ஈதன்றி ஒருநாள் குலோத்துங்க சோழன் புதியகிரீடந் தரித்தபோது ஒட்டக்கூத்தர் அவன்செங்கோலின் திறத்தைப் பின்வருங் கவியின்படி சிறப்பித்தார். உடனே அரசன் போதுமென்று நிறுத்திவிட்டு அப்பாட்டின் பிந்திய இரண்டடிகளையும் பாடி ஒட்டக்கூத்தனைச் சிறப்பித்தான்.

ஆடுங்கடைமணி நாவசையாம லகிலமெங்கு
நீடுங்குடையைத் தரித்தபிரானிந்த நீணிலத்திற்
பாடும் புலவர் புகழொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்கச் சோழனென் றேயெனைச் சொல்லுவரே

இதில் வாயிலிற்கட்டிய மணியின் நாக்கு அசைய இடங்கொடாமல் செங்கோல்செலுத்தியதும் அப்படிச் செலுத்தியவன் ஒட்டக்கூத்தன் பாதத்தைச் சிரசின்மேல் தாங்குதலும் காட்டப்பட்டன. முன்னாளில் நாட்டில் அதிகாரிகள் அக்கிரமம் செய்தால் அது அரசன்காதிற் படாதபடி அவ்வதிகாரிகள் முறையிட்டுக்கொள்ள அரசனிடம் வருவோரைத் தடுப்பதுண்டாகையால் அதற்குவழியின்றிக் கோட்டைவாசலில் ஒரு பெரியமணி கட்டிவைப்பதுண்டு. நியாயம்பெறுதவன் அம்மணியின் நாவை அசைத்துச் சத்தமிட்டால் அரசன் அவனை வருத்தி நியாயமளிப்பன். இதுதான் வழக்கம். குலோத்துங்கன் நாளில் அப்படியாரும் முறையிடவில்லை யென்பது அச்சிட்டதினவர்த்தமானிகள் தலைப்படாத முற்காலத்தில் சுதேச அரசாட்சியின் தன்மையைக் குறிக்கும் ஒருவிசேஷம்.

---

# கம்பர் சரித்திரச் சுருக்கம்.



ஸ்ரீராமனுடைய புண்ணிய சரித்திரத்தைச் சொல்வதற்கு ஆரியபாஷையில் ஆதிகாவியமாகிய வால்மீகராமாயணம்போலத் தென்மொழியாகிய தமிழ்ப்பாஷையில் கம்பராமாயணம் என்னும் இனியகாவியம் எங்கும் பிரசித்தமாக வழங்கி வருகின்றதல்லவா? இந்தத் தமிழ் ராமாயணம்செய்தவர் "புவிச்சக்கரவர்த்திகள் போற்றிப் புகழ்ச்சும் கவிச்சக்கரவர்த்தி" என்று அருமையான பட்டப்பெயர் பெற்ற கம்பர் என்னும் கவிசிரோமணியாம். கம்பரால் செய்யப்பட்டதனுலேயே இந்த ராமசரித்திரத்திற்குக் கம்பராமாயணமெனப் பிரசித்தியுண்டாயிற்று. "கம்பன்வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்" என்று யாவரும் வியந்துகூறும்படி இவர் பிரபல வித்துவானைதும், பிறகு ராமாயணம்பாடி அரங்கேற்றியதுமாகிய இவருடைய சரித்திரம் யாவரும் கேட்டு வியக்கத்தக்கதா யிருக்குமாதலால் அதனை ஒருவாறு சுருக்கமாய் இதனடியில் எழுதுகிறோம். இவர் ராமாயணம் பாடுவதற்காகப் பட்டபிரயாசை அத்தனை அதிகமல்ல; பதினாயிரம் பாக்களையும் எளிதிலேபாடி முடித்துவிட்டார். ஆயினும் அதனை அரங்கேற்றுவதற்காகப் பட்டகஷ்டங்கள் தாம் அவர்சரித்திரத்தில் முக்கிய விஷயங்களா யிருக்கின்றன.

ஏறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்னே திருவெண்ணெய் நல்லூரில் சடையப்ப முதலியாரென்னும் பிரபு ஒருவர் மிகப் பிரசித்திபெற்று வாழ்ந்திருந்தார். அவராலே தான் கம்பர் முன்னுக்குவந்தவர். அந்த நன்றியறிதலை விளக்கும்பொருட்டே கம்பர் தாம் இயற்றிய ராமாயணத்தில் 100–பாட்டுக்கு ஒரு பாட்டுவீதம் மேற்படி சடையப்பமுதலியாருடைய பெருமை தோன்றும்படியான பாடல்களைப் பாடியமைத்தார். கம்பர் திருவழுந்தூர் என்னும் திவ்விய தேசத்தில் பிறந்தவர். இளமையிலேயே அவர்க்குத் தந்தை யிறந்துபோயினர். தாயார் பிள்ளையை வைத்துக்கொண்டு

ஜீவிக்க வழியொன்று மில்லாமல், கூலிவேலைசெய்தாவது பிழைக்கலாமென்று புறப்பட்டு, திருவெண்ணெய் நல்லூரில் மேற்படி சடையப்பமுதலியாரை வந்து அடுத்துப் பிள்ளையைக்காப்பாற்றிவந்தாள். அப்பொழுது கம்பரும் சடையப்ப முதலியார் வீட்டுப் பிள்ளைகளுக்குச் சுவடிக்கட்டு தூக்குகிறவராயிருந்து அவர்கள் பள்ளிக்குப்போகும்போது கூடச் சுவடிக்கட்டுகளைத் தூக்கிக்கொண்டு போவதும், திரும்பி வீட்டிற்குவரும்போது தூக்கிக்கொண்டு வருவதுமாயிருந்தார். ஆரம்பத்தில் இவர்க்கு மற்றொருவேலையும் கிடைக்காமல் தெய்வாதீனமாய்ச் சுவடி தூக்குகிற வேலையே கிடைத்ததனாலேயே நாமகளது நல்லருள் அவரிடத்தில் பூரணமாயுண்டென்பது புலப்படுகின்றதல்லவா? பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் முதலியோ ரெல்லாம் கம்பருடைய நிலைமையைக்கேட்டு அவரிடத்தில் மிகவும் இரக்கமுற்றவர்களாய்ப் படிப்புச் சொல்லிக்கொடுத்துத் தங்களா லியன்றமட்டும் அவர்க்கு உதவிசெய்துவந்தார்கள்.

## இவர் பண்டிதரானதும், கம்பரென்று பெயர்பெற்றதும்

அவ்வாறிருக்கையில் கம்பருக்கு எழெட்டு வயதானபிறகு பாடசாலை உபாத்தியாயர் வைரபுரமென்னும் கிராமத்திலுள்ள தமது கம்பங்கொல்லை முதலியவற்றிற்குக் காவல்காத்திருக்கும்படி ஒருநாள் கம்பனை அவ்விடத்திற்கு அனுப்பினார். அவர் சொற்படியே கம்பரும் தவறாமல் போய்க் காலைமுதல் காவல்காத்துக் கிளியோட்டிக் கொண்டிருந்தார். நடுப்பகலிலே நல்ல வெயில்வேளையில் அவர்சற்று இளைப்படைந்து அருகிலிருந்த காளிகோயிலிலே போய்க் கொஞ்ச நேரம் படுத்தார். படுத்தவுடனே தினைக்கொல்லையில் குதிரைமேய்வதாகக் கனவுகாண, உடனே விழித்துக்கொண்டு ஓடிப்போய்ப் பார்த்தார். உண்மையாகவே ஒரு குதிரைவந்து கொல்லையில் மேய்ந்து கொண்டிருந்தது; தம்மாலானமட்டும் அதை அதட்டியோட்டிப்பார்த்தார். என்ன ஓட்டியும் அது

அசையவில்லை; அதுகண்டு கம்பர், ஐயோ, கொல்லைமுழுதும் கதிர்விட்டு மணிமுற்றியிருக்கிறதே; கதிரெல்லாம் அநியாயமாய்ப் போகிறதே; உபாத்தியாயர் கேட்டால் அடிப்பாரோ; அவருக்கு என்ன சொல்லுகிறதென்று அச்சங்கொண்டு ஒன்றுந் தோன்றாமல் கண்ணுங் கண்ணீருமாய் அழுதுகொண்டு நின்றார். அதுகண்டு காளிகாதேவி அவரிடத்தில் திருவுளமிரங்கி அவர்க்குப் பிரத்தியக்ஷமாகி, பிள்ளாய், ஏன் புலம்புகிறாயென்று கேட்க, கொல்லையெல்லாம் குதிரை மேய்ந்துவிடுகிறது; எந்நேரம் ஓட்டினாலும் அது அவ்விடம்விட்டு அசையவில்லை; இதைக்கேட்டால் உபாத்தியாயர் என்னசெய்வாரோ வென்று பயமாயிருக்கிறதே யென்று சொன்னதற்கு, தேவியானவள், பயப்படாதே யென்று அவரைச் சமாதானப்படுத்தி, கவிச்சக்கரவர்த்தி யாகும்படியாயும், சொன்னவாக்குச் சொன்ன வண்ணம் பலிக்கும்படியாயும் பூர்ணமாய் அனுக்கிரகித்து, இப்பொழுது போய் ஓட்டினால் குதிரை ஓடிப்போகும் என்றுசொல்லி மறைந்துபோயினாள். கம்பர் திரும்பித் தினைக்கொல்லையில் போய்ப்பார்த்தபோது குதிரை முன்போலவேதான் மேய்ந்துகொண் டிருந்தது. அதைக் கண்டவுடனே நாமகள் கடாக்ஷத்தால்

"வாய்த்த வயிரபுர மாகாளி யம்மேகேள்
காய்த்த தினைப்புனத்திற் காலைவைத்து—சாய்த்துக்
கதிரைமா ளத்தின்ற காளிங்க ராயன்
குதிரைமா ளக்கொண்டு போ"

என்னும் வெண்பாவொன்று அவர் வாயினின்றும் உதித்தது. தக்ஷணமே அந்தக்குதிரை கீழேவிழுந்து இறந்துபோயிற்று. அக்குதிரையோ அவ்வூர் அதிகாரியாகிய காளிங்கராயன் என்பவனுடையது: நடந்த வாலாற்றைப் பார்த்திருந்த ஒருவர் உடனே அச்செய்தியை உபாத்தியாயரிடம் சென்று அறிவிக்க, அவர் அக்கணமே ஓடிவந்து பார்த்துக் குழந்தாய், இது ராயன்வீட்டுக் குதிரையாயிற்றே; என்

யோசியாமல் இப்படிப்பட்ட காரியம் செய்துவிட்டாய் என்று சொல்லிக் கலக்கமுற்றார். அதுகண்டு கம்பர் உடனே முன் பாடிய பாடலில் நான்காவது அடியைமாத்திரம் "குதிரை மீளக்கொண்டுவா" என்று மாற்றி, மற்றதை முன்போலவே முழுதும் பாடினார். மாண்டகுதிரை மறுபடியெழுந்து ஓடிப் போயிற்று. அதுகண்டு உபாத்தியாயர் கம்பர் திறமைக்கு வியந்து அவரை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போயினார்.

பிறகு இச்செய்தி காளிங்கராயனுக்குத் தெரியவர, அவன் அக்காலத்தரசனாகிய துங்கனென்னும் சோழராஜனுக்கு இவ்வதிசயங்களையெல்லாம் விவரமாய்த்தெரிவித்தான். அதைச் சோழராஜன் கேட்டு, இத்தன்மை அற்புதச்செய்கையுள்ள சிறுவனைத் தான் பார்க்கவேண்டுமென்று வரவழைக்கக்கம்பரும் அவ்வாறே அவ்விடஞ்சென்று அரசனெதிரே போய் நின்றார். அவரைக் கண்ட அரசன் நீர் எவ்விடம் என்று கேட்க, "திருவெண்ணெய் நல்லூர்" என்று அவர் சொல்லியதற்கு, அரசன் மறுபடியும், அது எத்தன்மையது; யாருடைய ஆதீனத்திலிருப்பது; எனவினவ, கம்பர்;

"மோட்டெருமை வாவிபுக முட்டவரால் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டம்
அடையா நெடுங்கதவு மஞ்சலென்ற சொல்லும்
உடையான் சடையனறனூர்,,

என்று ஒருபாடலைப்பாடினார். அதுகேட்டுத் துங்கன் மிக்க மகிழ்ச்சிகொண்டு அவரை விசேஷமாய்ச் சம்மானித்து அனுப்பினான். அது முதல் சடையப்பமுதலியாரும் கம்பரை விசேஷமாய் அபிமானித்து ஆதரித்துவந்தார். கம்பரும் தம்மை முன் "பையா" என்று அழைத்தவர்களெல்லாரும் "ஐயா" என்று அழைக்கும்படி பெருமைபெற்றுப் பிரபல வித்வானாயினார். இவர் சோழராஜன் முன்னிலையில் சென்றபொழுது கம்பும் கையுமாய்ப் போய்நிற்க, அவன் இந்தக்

கம்பனு இத்தன்மையானசெயல் செய்தவனென்று வினவினனும். அதுகாரணமாகவே இவர்க்குக் கம்பரெனப் பெயர் அமைந்ததென்கிறார்கள். கம்பங்கொல்லை காத்ததனால் கம்பரெனப் பெயர் அமைந்ததென்றும் சொல்லுகிறார்கள். பிறகு கம்பர் சடையப்பமுதலியாரால் விவாகமும் செய்விக்கப்பெற்று, துங்கனுடைய குமாரனாகிய குலோத்துங்க சோழராஜனால் மிகவும் அதிகமாக நன்கு மதிக்கப்பெற்று அவனுடைய ஆஸ்தான வித்வான்களுக்கெல்லாம் தலைவராகி, அவ்விடத்திற்கு நாடோறும் சென்று, அங்குள்ள ஒட்டக்கூத்தர் முதலியோரும் அரசனும் வியக்கும்படி சாதுரியமாகவும் சமயோசிதமாகவும் பற்பல கவிகள்பாடிப் பிரசங்கித்துக்கொண்டிருந்தார்.

## கம்பர் இராமாயணம் பாடியது.

இவ்வாறிருக்கையில் சடையப்ப முதலியார் கம்பருடைய கவிபாடுந் திறத்தைக்கண்டு வியப்புற்று, இவர் ஸ்ரீராமனுடைய புண்ணிய சரித்திரத்தைத் தமிழில் ஒரு காவியமாகப்பாடினுல் உலகத்தார்க்கு மிகவும் உபகாரமாகுமெனத் தெரிந்து, ஒருநாள் கம்பரை நோக்கித் தமது கருத்தைத் தெரிவிக்க, அவரும் அப்படியே யாகட்டுமென்று அங்கீகரித்திருந்தார். ஆயினும் கம்பர் அதைப்பற்றித் துரிதப்படாமல் தாமதப்படுத்திக்கொண் டிருப்பதுகண்டு, முதலியார் தம்கருத்தைச் சோழராஜனுக்குத் தெரிவித்தார். ராஜனும் இது நல்ல யோசனைதானெனத் தெரிந்து, இவரைமாத்திரம் தனியே பாடச்சொன்னுல் காரியம் சீக்கிரத்தில் முடியாது; இருவரை ஏககாலத்தில் பாடும்படிசொன்னுல் போட்டியின்மேல் நிறைவுபெறவேண்டு மென்று சீக்கிரமாய்ப்பாடி முடிப்பார்களென்று யோசித்து, கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் வரவழைத்து, நீங்கள் இருவரும் தனித்தனி இராமாயணம் பாடிக்கொண்டு வாருங்கள்; உங்கள் திறமையைப் பார்ப்போமென்று கட்டளையிட்டான். அவர்களும் அப்படியே என்று

ஒப்புக்கொண்டு போய்விட்டார்கள். ஒட்டக்கூத்தர் அன்றை யதினமே பாடத்துவக்கி, பாலகாண்டமுதல் ஐந்துகாண்டம் முடித்து யுத்தகாண்டத்தில் கடல்காண் படலம்வரையில் பாடினார். அதுவரையில் கம்பர் தெய்வவணக்கங்கூடப் பாட வில்லை. அது தெரிந்து முதலியார் வேந்தனிடம் சென்று, தாங்கள் கம்பரையும் ஒட்டக்கூத்தரையும் இராமாயணம் பாடச்சொன்னீர்களே; பின்பு ஏனென்றுகேளாதிருக்கலாமா என்று சொல்ல, அரசன் உடனே அந்தக் கவிஞர் இருவரை யும் வரவழைத்து, இராமசரித்திரம் எவ்வளவு பாடியாயிற் றென்று வினவினன். அதற்கு ஒட்டக்கூத்தர் உள்ளபடியே கடல்காண்படலம் வரையில் முடிந்ததென்று கூற, கம்பர் கலைமகள் கடாக்ஷம் பெற்றவராதலால், நாமிவர்க்கு இளைக்க லாகாதென்று கடல்காண் படலத்துக்கு அப்பாலுள்ள திரு வணைப்படலம் வரையிலாயிற்றென்றார். ஆயின் அதையெ டுத்துக் கொஞ்சம் பிரசங்கம் செய்யும் கேட்போமென்று அரசன்கூற, கம்பர் உடனே ஸரஸ்வதியின் பிரசாதத்தால் அந்தப்படலத்தை மாத்திரம் எழுபது செய்யுட்களால்பாடிப் பிரசங்கம் செய்தார். அப்படலத்தில் திருவணைகட்டுகிற சந் தர்ப்பத்தில்,

> "குமுத னிட்ட குலவரை கூத்தரில்
> திமித மிட்டுத் திரியுந் திரைகடல்
> துமித மூர்புக வானவர் துள்ளினர்
> அமுத மின்னு மெழுமெனு மாசையால்"

என்றபாடல் வந்தது. குமுதனென்னும் வானரவீரன் கொ ண்டுவந்து அந்தரத்திலிருந்துபோட்ட பெரியமலைவந்து வீழ் ந்து கூத்தாடிபோலத் திமிதம் என்று ஒலித்துச் சுழல, அத னல் நுரைத்துத் திரைத்துக் குமிழியிட்டெழுந்த கடல்நீர் த்துளிகள் தங்கள் ஊராகிய சுவர்க்கத்தில்புக, அதை அங்கு ள்ள தேவர்கள் கண்டு, முன் ஒரு மலையையிட்டு அமுதமெ ழும்படி பாற்கடலைக் கடைந்தார்களே, இப்பொழுது பலமை

லேகளை இத்தென்கடலில் போடுவதனால் இனியிதையும் கடைவார்கள்; முன்போலச் சொற்பமாகாமல் இதினின்றும் அமிதமாய் அமுதம் உண்டாகும்; வேண்டியமட்டும் பருகலாமென்ற ஆசையுடையவர்களாய்த் துள்ளி யாடினார்கள் என்று பொருள்கூறி அப்பாடலைப் பிரசங்கிக்கக்கேட்ட ஒட்டக்கூத்தர், துளியைத்துமி என்றீரே; அது எந்த நிகண்டிலுள்ளது? அல்லது அதற்கு எங்கேயாவது பிரயோகமுண்டாவென்று ஆக்ஷேபிக்க, கம்பர் இது உலகவழக்கென்றார் அதற்கு ஒட்டக்கூத்தர், "கொரடிகற்றவன் இடறிவிழுந்தால் அதுவும் ஒருவரிசை" என்பதுபோல, இவர் வாய்தவறிச் சொன்னதை வழக்கென்று சாதிக்கிறாரெனத்தெரிந்து, உலக வழக்கானால் அதை மெய்ப்பிக்கவேண்டுமே என, நல்லது அப்படியே ஆகட்டுமென்று சொல்லிக் கம்பர் வீட்டிற்குப் போய்விட்டார். போய் அவ்விடத்தில், இதற்கு நாம் செய்ய வேண்டுவதென்னவென்று தவித்து ஸரஸ்வதியைப் பிரார்த்திக்க, அத்தேவி பிரசன்னமாகி, இதற்காக விசாரப்படவேண்டாம்; நாளைக்காலையில் அவர்களை யழைத்துக்கொண்டு இடைத்தெருவுக்கு வாவென்று சொல்லி மறைந்து போயினாள்.

அப்படியே மறுநாள் காலையில் கம்பர் ஒட்டக்கூத்தரையும் சோழராஜனையும் அழைத்துக்கொண்டு இடைத்தெருவுக்குப்போனார். போகையில் அங்கே தயிர்கடைந்துகொண்டிருந்த ஒருத்தி இவர்கள் காதில்கேட்கும்படி அருகேநின்ற சிறுவர்களைநோக்கி, "உங்கள்மேலே மோர்த்துமி தெறிக்கப் போகிறது, எட்ட இருங்கள்" என்றாள். கம்பர் ஒட்டக்கூத்தரைப் பார்த்துக் கேட்டீரோ என்று சொல்ல, சரிதானென்று அவர் ஒப்புக்கொண்டார்; ஆயினும் சற்றேநிதானித்து இது குடியில்லாத வீடென்று எனக்கு நன்றாய்த்தெரியுமே, இப்பொழுது இங்கே வந்திருப்பவர் யாரென்று விசாரிக்கும்

படி மறுபடியும் போய்ப்பார்க்க, அங்கேமுன்போலவே யாரு மில்லாதிருக்கக்கண்டு, இது நாமகளது திருவிளையாட்டே யல்லது வேறல்லவென நிச்சயித்து ஒட்டக்கூத்தர் வியப்பு டன் போய்விட்டார்.

பிறகு ஒட்டக்கூத்தர் ராமாயணம் மற்றதையும் பாடி முடித்தார். ஆயினும் அவர் மனதில் திருப்தியில்லை. கம்பரு க்கு ஸரஸ்வதி கடாக்ஷம் மிகுதியாயிருப்பதால் அவர்கவிக்கு முன் தமதுபாடல் பெருமைப்படாதெனத் தெரிந்து வெறுப் புற்று, ஒருநாள் தாம் பாடிய ராமாயண புஸ்தகத்தையெடுத் துக் கிழித்து எறியத்தலைப்பட்டார். அத்தருணத்தில் ஏதோ காரியவசமாய் அவ்விடம் சென்ற கம்பர் அவர் செய்கிற காரியமின்னதெனத் தெரிந்து, அதற்குள் யுத்தகாண்டம் வரையில் ஆறுகாண்டமும் கிழிபட்டுப்போனதைப் பார்த்து, ஐயோ! அருமையாய்ப் பாடியதை இப்படி அநியாயமாய்க் கிழித்தெறியலாமா? ஏழாவதான உத்தரகாண்டமாவது இப் படியே யிருக்கட்டும்; நான் பாடிய ஆறுகாண்டங்களுடன் இதுவும் சேர்ந்து இராமாயணம் பூர்ணமாகட்டு மென்று சொல்ல, அப்படியே யென்று ஒட்டக்கூத்தரும் அதற்குச் சம்மதித்தார். உத்தரகாண்டத்தில் இராக்கதர்களுடைய பூர் வசரித்திரமே மிகுதியாதலால் தாம் அதைப் பாடவேண்டி யது அவசியமன் றென்பதும், அதுவுமிருந்தால் இரண்டு வாக்குக்குமுள்ள வேற்றுமை நன்றாய் விளங்குமென்பதும் கம்பர் கொண்ட கருத்து. அதன்பிறகு கம்பர் தாம் ஏற்றுக் கொண்டகாரியம் நிர்விக்கினமாக நிறைவேறும் பொருட்டுச் சுந்தரகாண்டம் முதல் பாடத்தொடங்கிக் கிரமயாய் இராமா யணம் ஆறுகாண்டமும் நாளொன்றுக்கு எழுநூறுபாட்டு வீதம் ஸ்ரீராமபட்டாபிஷேகம்வரையில் பதினாயிரம் பாடல்க ளாய்ப் பாடிமுடித்தார். ஒட்டக்கூத்தர் உத்தரகாண்டத்து டன் இராமாயணம் பன்னீராயிரம் பாடலாகின்றது.

இது இவ்வாறிருக்க, சோழன் கதை யென்னவென்பீர்களோ? அவன் கம்பரை விட்டுப்பிரிந்த நாள்முதல் தாயை விட்டுப்பிரிந்த கன்றுபோல் அலைந்து தவித்துப் பலவிடங்களிலும் தூதர்களையனுப்பி அவரைத் தேடத்தொடங்கினான். எங்கும் அவர் இருப்பிடம் தெரியவில்லை. கடைசியில் சேரராஜனிடத்தி லிருக்கிறாரென்று எப்படியோ குறிப்பால் அறிந்துகொண்டு, தயைசெய்து தன் குற்றத்தைப் பொறுத்துக் கொண்டு உடனே தன்னிடம் வரவேண்டுமென்று கம்பருக்கு ஒரு கடிதமும், தடையின்றி அவரை அனுப்பும்படி அரசனுக்கு ஒரு பத்திரிகையும் எழுதியனுப்பினான். அதுகண்டு கம்பர் சோழனிடம் போவதற்கு இதுதான் தருணமென்று அச்செய்தியைச் சேரனுக்கு அறிவிக்க, அவன் அவரை விட்டுப்பிரிய மனமில்லாமல் விசனப்பட, கம்பரும் அதற்கேற்றபடி பலவிதமாய் உபசாரவார்த்தைகள் சொல்லிச் செலவு பெற்றுக்கொண்டு அவர் கொடுத்த பலவிதமான பரிசுகளுடனே, யானை குதிரை முதலியவைகளும் பலவிதமான பரிஜனங்களும் புடைசூழ, அங்கிருந்து புறப்பட்டார். ராஜன் சிறிதுதூரம் வழிகொண்டுவிட்டுத் திரும்புகையில் கம்பரை நோக்கி, நீர் சோழராஜனிடத்திற் செய்த பிரதிக்ஞையை மறந்தீர் போலுமென்ன, கம்பர், இல்லை, அவ்விடம் சேர்ந்தபின் சமயம்பார்த்து ஒரு விண்ணப்பமெழுதுகிறேன்; கணப்பொழுது வந்திருந்து என்னைப் பெருமைப்படுத்தவேண்டுமென்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு போயினார்.

பின்பு சோழராஜன் அவரை நன்குவரப்பெற்று அவர்க்குச்செய்த உபசாரங்களையும் இங்கு எடுத்துரைக்க வேண்டுமோ? அவரைக்கண்டபோது அவ்வரசன் மேகத்தைக்கண்ட மயில்போலக் களித்து, அன்றுதொட்டு அவரை முன்னிலும் பதின்மடங்கு அதிகமாகப் பெருமைப்படுத்தலானான். கம்பர் தாம் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றிய புதுமையைக் கடைசியாகக் கூறிமுடிப்போம். கம்பரோடுகூடிக் கோலா

கலமாய்ப் பேசிக்கொண் டிருக்கும்போது சோழராஜன் ஒரு சமயத்தில் அவரை நோக்கி, முன் நீர்செய்த பிரதிக்ஞை என்னவாயிற்று என்று விநோதமாய்க் கேட்க, அவர், அது இன்னும் எட்டுத்தினத்தில் தெரியவருமென்று கூறி, உடனே சேரனுக்குத் திருமுகம் போகவிட்டனர். அப்பத்திரிகையைக்கண்ட க்ஷணமே அவ்வரசன் புறப்பட்டு மாறுவேஷம் பூண்டுவந்து, கம்பர் சோழன் சபையி லுட்கார்ந்திருக்கும் போது அண்டையிலிருந்து அவருக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுத்தான். அந்தக் குறிப்பைச் சோழன் மகள் கண்டறிந்து தன் தந்தைக்குத் தெரிவித்தாள். அதை அறிந்துகொண்டு கம்பர் உடனே சேரனுக்குச் சமிக்ஞை காட்டி அவனை அனுப்பிட்டார். ஆ! அவருடைய லௌகிக தந்திரங்களைப் பாருங்கள்! சேரராஜன் அடைப்பைக்காரனாக வந்து தமக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்தாலும் தாம் அதைப் போட்டுக்கொள்வது மரியாதையல்லவென்று அவர் அவைகளை அப்படியே கையில் அடுக்கிவைத்துக் கொண்டிருந்தார் இவைகளை யெல்லாம் பார்க்கச் சோழராஜனுக்கு அவரிடத்தில் அளவில்லாத சந்தோஷமும் கவுரவமு முண்டாயின, அதனால் அவன் அவருடையபேரும் பிரசித்தியும் இன்னும் அதிகமாய் உலகமெங்கும் பரவும்படி செய்துகொண்டு அவரைப் பலவிதமாகப் பெருமைப்படுத்தி வந்தான்.

கம்பர் கவிபாடுவதில் கற்பனைசக்தியுடையவர் பௌதிகப்பொருள்களை வருணிப்பதிலும் இயற்கைத் தன்மையை எடுத்துக்காட்டுவதிலும் சுயஞ்சக்தி மிகுந்தவர். இதுபற்றியே கல்வியிற் பெரியவன் கம்பனெனும் பழமொழி தமிழ்நாட்டில் இன்றும் வழங்கிவருகின்றது. இவர் தென்னாட்டிற் சென்ற போது ஏற்றம் இறைக்கும் தோட்டக்காரன் ஒருவன் ஏற்றத்தை நிறுத்தும்போது அவன் பாடியபாட்டை நிறுத்தும் சமயமாயிருந்தது. "மூங்கிலிலைமேலே" என்று பாட்டைநிறுத்தி விட்டுக்கீழே இறங்கினன். கம்பர் இப்பாட்டின் தொடர்ச்

சியை யறியும்பொருட்டு மறுநாள் ஏற்றம் இறைப்பவன் வந்து ஏற்றத்தின்மேலேறி "மூங்கிலிலைமேலே தூங்கும்பனி நீர்காள்" என்று பாடியதை அங்குப்போயறிந்து கற்பனை நயத்தைப்போர உகந்தா ரென்பதும் நாட்டிற் பரம்பரையாய் நடைபெறும் விருத்தாந்தம்.

கம்பர் தாம்பாடிய ராமாயணத்தை அரங்கநகரில் சாலி வாகன சகம் 807-ல் நாதமுனிகள் காலத்தில் அரங்கேற்றினார். நாதமுனிகள் வைணவர்களின் முக்கியமான ஆசாரியர். வைணவர்கள் கம்பரை நாலாதிக்குகளிலும்போய் ராமாயணத்தின் சிறைப்பற்றிப் புலவர்களிடம் சாற்றுக்கவிகளை வாங்கி வரும்படி பலநாள் அலைக்கழித்தபோது கம்பர் ஆழ்வார்கள் விஷயமாய் அபசாரவார்த்தைகளைச் சொல்லித் தம்மை புகழ்ந்து கொண்டமைக்காக நாதமுனிகள் கம்பரை மண்டபகைங் கரியம் செய்யச்சொல்லி அவ்வபராதத்தை க்ஷமித்தருளினார். அரங்கன் சந்நிதியில் கம்பருக்குத் தீர்த்தம்பிரசாதம் கொடுப் பித்தபோது அர்ச்சகன் மூலமாக ஆவேசம் உண்டாயிற்று. நீ நம்சடகோபனைப் பாடினையோ வென்று அரங்கநகரப்பன் வினவவே அங்கே கம்பர் உடனே சடகோபரைச் சிறப்பித்து ஒருகலித்துறை யந்தாதியை நவரசம்பொலியப்பாடினார். கம்பநாட்டாழ்வாரெனும் பெயரும் கம்பருக்குச் சூட்டப் பட்டது. உடனே தீர்த்தப்பிரசாதங்கள் கொடுக்கப்பட்டன. கம்பர்பாடிய மூன்று பாடல்கள் நாலாயிரப் பிரபந்தத்தில் சேர்க்கப்பட்டுள்ளன.

அம்பிகாபதி யென்பவன் கம்பரதுமகன். இவனும் சிறந்த கல்விமான். இவன் அம்பிகாபதி கோவையெனும் பிரபந்தம்பாடியுள்ளான், கம்பர் பாடியவைகளில் ராமாயணந்தான் பாரகாவியம். இதில் அவருடைய சுயமாகிய கற்பனுவல்லபம் ஒபபுயர்வின்றி விளங்குகின்றது. கம்பர் கவிநயங்களைப்பா ராட்டாதார் தமிழ்நாட்டில் யாருமில்லை. நாமகளந்தாதி கயலை

யந்தாதி, திருக்கைவழக்கம் முதலிய சிறு பிரபந்தங்களும் பாடியுள்ளார். தனிப்பாடல்கள் பாடியவையோ அநந்தம். அவைகளிற் சில பாடல்கள்தான் இக்காலத்தில் உள்ளன. வடமொழியிற் காளிதாசன் சுயமாகிய கற்பனாசத்தியில் விளங்குதல்போலக்கம்பனும் தமிழிற் காளிதாசனாகவே விளங்குகின்றான் இவ்விருவர்களும் காளிதாசர்களான மேற்றான் தம் வல்லமையை உலகோர்கண் டாநந்திக்க நவரசபுஞ்சமாய்க் கவிமாரியைக் காளமேகம்போற்பொழிந்துள்ளார். தமிழ் நாட்டு மூவேந்தரும் புவிராசர்களும் கவிராசர்களும் மெச்சி மகிழும்படி ராமாயணம்பாடிய கம்பர் அதில் தமது அபூர்வமான கற்பனாசத்தியைக் காட்டியிருப்பதுடன் பற்பல நீதி நெறிகளையும் கூறியுள்ளார்.

## கற்பனாசத்தி மிகுந்தபாடல்களிற் சில வருமாறு.—

## மிதிலைக்காட்சிப் படலம்.

### சந்திரோதய வர்ணனை.

நீத்த மதனில் முளைத்தெழுந்த வெண்வெண் திங்களெனுந் தச்சன்
மீத்தன் கரங்க ளவைபரப்பி மிகுமெண் ணிதவாம்வெண் சுதையாற்
காத்த கண்ணன் மணியுந்திக் கமலநா ளத்திடைப் பண்டு
பூத்த வண்டம் பழையதென்று புதுக்கு வானும்போன் றுளதால்.

## அயோத்தியாகாண்டம் தைலமாட்டுபடலம்.

மருமத்துத் தன்னை யூன்றும் மறக்கொடும் பாவந் தீர்க்கும்
உரும்ஒத்த சிலையி னோரை ஒருப்படுத் துதவி நின்ற
கருமத்தின் விளைவை எண்ணிக் களிப்பொடு காணவந்த
தருமத்தின் வதனம் என்னப் பொலிந்தது தனிவெண்டிங்கள்.

### சூரியோதய வருணனை.

## பாலகாண்டம் கடிமணப்படலம்.

அஞ்சன வொளியானும் அலர்மிசை யுறைவாளும்
எஞ்சலில் மணநாளைப் புணர்குவ ரெனலோடும்
செஞ்சுட ரிருள்கீறத் தினகர னொருதேர்மேல்
மஞ்சனை யணிகோலங் காணிய வெனவந்தான்.

நீதிபோதனை.

## பாலகாண்டம் தாடகைவதைப்படலம்.

சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னாள்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்றன்றே.

## பாலகாண்டம் வரைக்காட்சிப் படலம்.

தேருண்ட மேலவர் சிறியவர் சேரினும் அவர்தம்
மருண்ட புன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு லுரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையுந் தன்னிற மாக்கிய விரதம்.

## ஆரணியகாண்டம் சடாயுவதைப் படலம்.

பொன்னேக் கியர் தம்புலன் நோக்கியபுன்க ணோரும்
இன்னேக் கியரில் வழியெய் தியநல் விருந்தும்
தன்னேக் கியநெஞ் சுடையோ கியர்தன்மை சார்ந்த
மென்னேக் கியர்நோக் கமுமா மெனமீண்ட தவ்வேல்.

## கிட்கிந்தாகாண்டம் பம்பைப்படலம்.

ஈர்ந்தநுண் பளிங்கெனத் தெளிந்த நீர்ம்புனல்
பேர்ந்தொளிர் நவமணி படர்ந்த பித்திகை
சேர்ந்துழி சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலால்
ஓர்ந்துணர் வில்லவ ருள்ள மொப்பது.

சகோதர ரோருமை.

## பாலகாண்டம் திருவவதாரப்படலம்.

பரதனு மிளவலு மொருநொடி பகிரா
திரதமு மிவுளியு மிவரினு மறைநூல்
உரைதரு பொழுதினு மொழிகில ரெனையாள்
வரதனு மிளவலு மெனமரு வினரே.

## அயோத்தியாகாண்டம் நகர்நீங்குபடலம்.

நீருள வெனினுள மீனும் நீலமும்
பாருள வெனினுள யாவும் பார்ப்புறின்

அப்பால் திருக்குருகூரிலே பொலிந்து நின்றபிரான் திரு முன்பே புத்திரரை எடுத்துக்கொண்டு இருமுதுகுரவரும் பலபரிவாரங்களுடனே போய், பெருமானுக்குத் திருமஞ்சன மாட்டி நிவேதனங்கள் சமர்ப்பித்தனர். காரிராஜாவும் அப்போது தவப்பயனான தன்மகனுக்கு அருள்செய்யுமாறு வேண்டினர். அப்போது அச்சிறுவர், ஆலயத்தின்சமீபத்தில் தமது பொருட்டாக ஆதிசேஷாமிசமாக உற்பவித்திருந்த ஒருபுளிய மரப்பொந்தில் புக்கனர். அயல் நின்றவர் எவரும் இவ்வற்புதத்தைக் கண்டிலர்: அந்தப் பொந்தினிடத்தில் தெற்கு நோக்கிப் பூரணசந்திரன் வலக்கையில் சின்முத்திரை தரித்து இடதுகையைத் தொடைமேலிட்டதுபோலே ஆழ்வார் பதுமாசனமாக வீற்றிருக்கக் கண்டனர். தந்தையுந்தாயும் இது நமக்குக் குழந்தையன்று;ஏதோவிந்தை விளைவிக்குநிமித்தம் இங்குவந்ததோர் தெய்வமாகும் எனக் கருதித் தம்மிடமே சென்றனர். பதினாறுவயது முதிர்ந்த அவ்வளவில் திருமாலின் நியமனப்படி சேனை முதலியாரும் ஆழ்வாரிடமடைந்து வகுளயாலே சூட்டி மற்றவர்கள் உணராத ஒரு இரகசியமாம் பிரணவ மந்திரத்தை அருளிச்செய்து மறைந்து விட்டனர். இப்படிப்பட்ட அற்புதங்களாலே

கண்டபேர்சில ரவனிவனென்றனர்காமனென்றனர் சில்லோர்
புண்டரீகனென்றனர் சிலர் மாலெனப் புகன்றனர்சில ராற்கீழ்த்
தொண்டர்சூழ் குருவென்றனர் சிற்சிலர்தோகைவாகன னென்றூர்
விண்டபேரு மற்றையரு மீங்கிவனென விழைந்தனர் சிலர்மாதோ.

இந்தப்பிரகாரம் ஆழ்வார் யோகத்தி லெழுந்தருளியிருக்கையில் பலபேர்கள் இவருடைய மகிமையையறிந்து வந்து நமஸ்காரம்பண்ணித் தங்கள் மனோபீஷ்டங்களைப்பெற்று "இந்த மஹாநுபாவருடைய ஹ்ருதயகமலமே பகவான் வீற்றிருக்குமிடம்" என்று தெளிவடைந்தனர். இதுநிற்க,

ஹிமாசலத்தின் அடிவாரத்திலே ஒரு அந்தணர், தமிழ் ஒரு சிறிதும் அறியாத குலத்தில் அவதரித்தவர், மெய்யறி

வுள்ளவர், திருமாலே தமக்குத் தேசிகனாக வருக என்று கடினமான உபாசனை செய்து வந்தார். அங்ஙனம் தடுமாறாத நிலையினின்று தவஞ்செய்து வருபவர் நெடுங்காலஞ் சென்றபிறகு ஒரு நாள் கண்வளராநிற்கையில் திருமால் அவர் கனவில் தோன்றி "உலகினர்க்குக் கட்புலனாகாத ஒரு சோதி உனக்குத் தோன்றும், நீ அதனைப் பின்பற்றிச்சென்று அதனிடம் சேர்க. உன் குறை நிறைவுறும்" என்றனர். அவ்வந்தணரும் துயிலுணர்ந்தெழுந்து சோதியைக்கண்டு அதனைப் பின்பற்றிச் செல்வாராயினர். சோதியும் நெடுகச்சென்று திருக்குருகூரிலே சடகோபர் வீற்றிருந்த உறங்காப்புளியின் பொந்திலே புகுந்தது. அந்தணரும் அங்குற்றடைந்து குருபரனுடைய திருவதனத்தைக் கண்டவளவிலே தமிழாகிய அமுதசாகரத்தின் நிலை விளங்கியது. இங்குவருக என்பார் போலே ஆழ்வாரும் அந்தணரை இருவிழியுங்கொண்டு கடாட்சித்தருளினர். அவ்வளவிலே அவ்வந்தணர் "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வினவினர். அதற்கு விடையாக ஆழ்வாரும் "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்றருளினர். அருளினமாத்திரத்தில் அவ்வந்தணர் அடிபணிந்தனர். அதன்மேல் சடகோபர் அந்தாதியாக ஆயிரம்பாட்டாலே செம்மொழிப் பாமாலையாகத் திருவாமொழியென்னும் திவ்வியப் பிரபந்தத்தை அருளிச்செய்ய அந்தணர் அதனைப் பட்டோலைபிடித் தெழுதிவைத்தார். சடகோபர் பாடியருளிய பிரபந்தங்கள்:— திருவிருத்தம் பாடல்கள் 100; திரு ஆசிரியம் பாடல்கள் 7; பெரிய திருவந்தாதி பாடல்கள் 87; திருவாய்மொழி பாடல்கள் 1102 ஆ பாடல்கள் 1296

இவைகளே நான்கு வேதஸாரமாம்.

சடகோபர் நாலாயிரப் பிரபந்தமாகிற ஸ்ரீ வைஷ்ணவத்தமிழ் வேதத்தை அருளிச் செய்த ஆழ்வார்களில் அதிசிரேஷ்டரா

கக் கொண்டாடப்படுவர்: வைஷ்ணவர்களுடைய ஆசிரிய பரம்பரையில் பூர்வாசாரியர்களுள் பரமாசாரியராகப் போற்றப்படுவர். வைஷ்ணவர்கள் இவரைத் திருமாலுக்கிரண்டாவதாகக் மெச்சுவது வழக்கம்.. இவருடைய பாசுரங்களெல்லாம் செம்பாகமாய்ப் பொருளாழமும் உடையன. வாய்ப் பலஇடங்களில் பக்திரசமும் கவிரசமும் பரவியிருக்கும். "அற்றது பற்றெனில் உற்றது வீடு என்பதே இவருடைய சித்தாந்தம், இதனை

நன்றாய் ஞானங்கடந்து போய்நல்லிந்திரிய மெல்லாமீர்த்
தொன்றாய்க்கிடந்த வரும்பெரும் பாழுலப்பிலதனை புணர்ந்
[துணர்ந்து
சென்றாங்கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே யப்போதே வீடதுவே வீடு வீடாமே

என்னும்பாசுரத்திலும் இனிது விளக்கியிருக்கிறார். பகவத் ஸ்வரூபத்தை.

ஆணல்லன் பெண்ணல்லன் அல்லாவலியுமல்லன்
காணலுமாகானுளனல்லனில்லை யல்லன்
பேணுங்காற் பேணுமுருவாகும் அல்லனுமாம்
கோணைபெரிதுடைத் தெம்பெம்மானைக் கூறுதலே

எனவிளக்கி யிருப்பது காண்க. இவ்விஷயமே

யாவையு மெவருந்தானு யவரவர் சமயந்தோறும்
தோய்விலன் புலனைந்திற்கும் சொலப்படா னுணர்வின்மூர்த்தி
ஆவிசேருயிரினுள்ளான் யாதுமோர்பற்றி லாத
பாவனையதனைக் கூடிலவனையுங் கூடலாமே

என்றும் வருகிறது.

பகவானை இறைஞ்சு முபாயம்.

உணர்ந்துணர்ந் திழிந்தகன்றுயர்ந் துருவியந்தவிந்நிலைமை
உணர்ந்துணர்ந் துணரிலுமிறை நிலையுணர்வரி துயிர்காள்
உணர்ந்துணர்ந் துரைத் துரைத்து அரியயனரனென்னுமிவரை
உணர்ந்துணர்ந் துரைத் துரைத் திறைஞ்சுமின் மனப்பட்ட தொன்றே.

இவ்வாழ்வார் நரஸ்துதி செய்யாத உறுதியுடையவரென்பது

வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்
ஆய்கொண்ட சீர்வள்ளலாழிப் பிரானெனக்கேயுளன்
சாய்கொண்ட விம்மையுஞ் சாதித்து வானவர் நாட்டையும்
நீ கண்டுகொள்ளென்று வீடுந்தருநின்று நின்றே,

திருமாலையன்றி வேறில்லை என்பது கோட்பாடாகையால்

கறுத்த மனமொன்றும் வேண்டா கண்ணனல்லாற் றெய்வமில்லை
இறுப்பதெல்லாமவன் மூர்த்தியாயவர்க்கே யிறுமினே

என்றார். திருமாலிருஞ்சோலைமலை யழகரை வர்ணிக்கும் பாசுரம் கவிரசஞ் சிறந்திருத்தலால் அதனை இங்கே எடுத்துக் காட்டுகிறோம்.

முடிச்சோதியாயுனது முகச்சோதி மலர்ந்ததுவோ
அடிச்சோதி நீநின்ற தாமரையா யலர்ந்ததுவோ
படிச்சோதியாடை யொடும் பல்கலனாய் நின்மனம்பொற்
கடிச்சோதி கலந்ததுவோ திருமாலே கட்டுரையே.

மாலடிமை யெனுந்தகவு மாறனன் றூட்டிவன் போலும்
சீலரிலா மாட்சிமையுந் தெரிந்துசிலர் மாறனென்றார்
சாலவிகற்பித்திகலும் சமயரையு மீர்த்துத்தன்
பாலடக்கும் பண்புணர்ந்தோர் பராங்குசனென்றுரைத்தாரே.

இங்ஙனம் சில காலங்கழிந்தவளவில், வடக்கிலிருந்து வந்த அந்தணரும் ஆழ்வார் விஷயமாகக் கண்ணிநுண்சிறுத்தாம்பு என்கிற பிரபந்தத்தைப் பாமாலையாகச் சூட்டியதால், இவருக்கு மதுரகவி என்கிற திருநாமம் வழங்குவதாயிற்று.

சடகோபரும் முப்பத்தைந்தாம்வயது பூர்த்தியானதன் மேல் பரமபதஞ் சென்றடையத் திருவுள்ளமா யிருக்கையில், திருமால் வைகுண்டவாசியான ஒரு வைணவன் போன்று எதிர்தோன்றி, எம்பெருமானது பரமபதத்துக்கு வாரீர் என்ன, ஆழ்வாரும் "வைகுந்தமன்றி யான் வேறிடம் அறியேன். திருமாலே பரம்பொருள், அவனே பூரணன் என்பது தெரிந்தேன். நீ பொய் உரைத்தனையே. நீவேறு

திருமால் வேறோ" என்றார். வைணவிராக வந்த பகவானும் "உனது உணர்ச்சியின் திறத்தை எல்லாரும் உணர்வுறச் செய்வதே பொருட்டாக இங்ஙனம் செய்தேன்" என்றான். என்றமாத்திரத்தில் அங்கே ஒருசோதிவிளங்கியது. ஆழ்வார் அதனோடொருவாகக் கலந்தருளினாராம். அப்பால் மதுரகவிகள் ஆழ்வாரை நம்மாழ்வார் என்று பூமியில் கொண்டாடி எம்மதமும் தம்மதமாகவே ஒப்பாக நிலைநிறுத்தினார்.

நான்கு வேதங்களிலும் உபநிடதங்களிலும் நேரே விளங்காது நற்பதமடைய மாந்தர்க்கு ஊன்றுகோலாகவும் வேதாந்தஸாரமாகவும் உள்ள அமுதொழுகும் இனிய தமிழ்ப் பாடல்களை இம்மகான் உபகரித்துள்ளா ரென்பதற்குப் பின் வரும் பாடல்களே திஷ்டாந்தமாம்:—

தெய்வ நிருபணம்

15–ம் திருவாய்மொழி கலிவிருத்தம்.

ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்
காணலுமாகானுளனல்லனில்லை யல்லன்
பேணுங்காற் பேணுமுருவாகு மல்லனுமாம்
கோணைபெரிதுடைத்து எம்பெம்மானைக் கூறுதலே.

விடேன்பதன் பொருள்.

78-ம் திருவாய்மொழி.

ஆசிரிய விருத்தம்.

நன்றாய் ஞானங் கடந்து போய் நல்லிந்திரிய மெல்லா மீர்த்து
ஒன்றாய்க் கிடந்தவரும் பெரும்பாழுலப் பிலதனையுணர்ந் துணர்ந்து
சென்றாங் கின்பத்துன் பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே அப்போதேவீடு அதுவே வீடு வீடாமே.

# வில்லிபுத்தூரார்.



முன்னாளில் தமிழ்நாட்டில் இனியதமிழ்க் கவி பாடும் புலவரெனப் பேரிசைகொண்டவர் இவரே. இவர்பெயர் வில்லி புத்தூரார். வில்லிபுத்தூர் ஆழ்வார் என்பதும் இவரது மற்றொரு நாமம். தமிழில் நாலாயிரப் பிரபந்தம் பாடிய ஆழ்வார்களில் ஒருவராகிய வில்லிபுத்தூ ராழ்வாரென்பார் வேறொருவர். தமிழ்ப்புலமை வாய்ந்த முதலிற் கூறியபுலவர்க்கு கவிதாஸார்வபூமன் எனும் பெயருமுண்டு. அப்பெயர் கவிபாடுவதில் தலைமை பெற்றமையால் வந்தது. ஆழ்வாரென்பதின் பொருள் பத்தியில் அழுந்தினவர் என்பதாம் இது தமிழில் நாலாயிரப் பிரபந்தம் பாடிய ஆழ்வார்களை முதன்மையாய் உணர்த்துவதாயினும் பிற்காலத்தில் திருமாலிடத்தில் பத்தி மிகுந்த பிறரையும் உபசாரவழக்காய் உணர்த்துவதாயிற்று. இத்தொடர்பால் பரதாழ்வான், சத்துருக்கினாழ்வான், பிரகலாதாழ்வான், கஜேந்திராழ்வான், சுதரிசனாழ்வான், எனவழங்கிவருதல் காண்க. வில்லிபுத்தூரார் பிறந்த வூர் சனியூர். இது பெண்ணை நதிபாயும் திருமுனைப் பாடி நாட்டிலுள்ளது. அக்காலத்து சேரர் பூபதி ஆட்க்கொண்டா னென்பவ னொருவனிருந்தான். இவன் பிறந்தவூரும் சனியூரேயாம். இவ்வாட்க்கொண்டான தனதெல்லையை இமயவரைக் கப்புறத்தும் பரவச் செய்தான். அதற்கு முன்பு சேரன் எல்லை கொங்கு நாட்டளவிலே தங்கலாயிற்று. பிறகுவடகொங்கெனும் நாட்டில் பரவியது, வடகொங்கு திருமுனைப் பாடி நாட்டிற்சார்ந்தது. இதிற்றான் திருக்கோயிலூர் முதலிய விஷ்ணுஸ்தலங்களும் திருவெண்ணெய் நல்லூர் முதலிய சிவஃத்தலங்களும் விளங்குகின்றன.

இதற்கு நடுநாடெனும் மற்றொரு பெயருமுண்டு. ஔவைப்பெண்மணி இதனைச் சேதிநாடென வழங்கியுள்ளாள்

ஔவை திருக்கோயிலூரைச் சிறப்பித்துப் பாடிய
வெண்பா.

பொன்மாரி பெய்யுமூர் பூம்பருத்தி யாடையாம்
அந்நாள் வயலரிசி யாகுமூர்—எந்நாளும்
தேங்குபுக ழேபடைத்த சேதிமா நாடதனி
லோங்குந் திருக்கோயி லூர்.

முன்னாளில் ஆட்கொண்டானை கொங்கர்கோனென்று வழங்
வந்தமையால் சனியூரைக் கொங்குநாட்டு எல்லையுட்சேர்
த கோயன்புத்தூர் போக்கில் உள்ளதென்று பலர்மயங்க
ட்டமுண்டாயது.

வில்லிபுத்தூரார் சமயாசாரத்தால் வைணவர். மாதவன்
ரணகமலங்களில் பத்திமிகுந்தவர். இவர்பத்திக்கு விஷயமா
ரபரம்பொருள் பாரதம்முதற்போர்ச் சருக்கத்தில் இவர்பாடி
ள்ள வணக்கக்கவியாலே இனிது விளங்குகின்றது. அக்கவி
வருமாறு:—

"மேவரு ஞானாநந்த வெள்ளமாய் விதித்தோ னாதி
மூவரு மாகியந்த மூவர்க்கு முதல்வ னாகி
யாவரும் யாவுமாகி யிறைஞ்சுவா ரிறைஞ்சப் பற்பல்
தேவரு மாகிநின்ற செங்கண்மா லெங்கள் கோவே."

இதனால் இவற்குவழிபடுகடவுள் திருமாலென்பதுமலை
மேல் ஒளிரும் தீபம்போல் விளங்குகின்றது. இவர் பிராமண
ஜாதியிலே வைணவ குலத்திலே வீரராகவா சாரியருக்குத்
திருக்குமாரராய்த் தோன்றியவர். இவர் 'விளையும்பயிர் முளை
யிலே" என்கிற பழமொழிப்படி பாலியத்திலேயே நல்லாசிரி
யனா யடுத்துக் கல்வியயின்று முத்தமிழும் வல்லவராய் தம
க்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லையெனும்படி மகா பண்டி
தரானார். நான்குவகைக் கவிகளையும் மிக வெளிதில் அமிழ்
தினுமினியவாகப் பாடும் வல்லவரானார். தமிழ்நாட்டு மூவே
ந்தர்களாலும் ஆவலுடனழைக்கப்பெற்றுக் குடை, சாமரை,

குதிரை, யானை, சிவிகை முதலிய பரிசுகளும்பெற்று புலவர் சிகாமணியாய் விளங்கினர். சோழநாடு, பாண்டிநாடு, மலைநாடு, கொங்குநாடு, நடுநாடு, தொண்டைநாடு, மகிஷநாடு எனப் பல பிரிவுகளையுடைய தமிழ்நாடெங்கும் சஞ்சரித்துத் தமதுபுகழை நாடெங்கும் பரவச்செய்தார். அக்காலத்து ஆட்கொண்டானுக்குத் திருமுனைப்பாடி நாட்டில் பாகையென்பது தலைமைநகராக விளங்கியது. இவன் எப்பொழுதும் தமிழ்க்கலா விநோதர்களாம் புலவர்களுடன் கூடித் தமிழை நான்காம் சங்கமும் உண்டு எனலாம் படிபலவகையாலும் பெருக்கி அழகுபெறச் செய்தனன். இவ்வில்லிபுத்தூரர் வீரவைஷ்ணவரல்லர். அகத்தியபட்டரென்பவர் வடமொழியில் பாலபாரதமென ஒரு சுருக்கப்பாரதநூல் செய்துள்ளார். அதன்போக்கையொட்டியே வில்லிபுத்தூரர் தமதுபாரதக்கதைகளை சுருக்கிக் கூறியுள்ளாரென்பது சிலர் கொள்கை. ஆனால் இவர் பாடுங்கவிகளில் அமைந்துள்ள சந்தவின்பத்தையும் சொல் நடையையும் நோக்குங்கால் வில்லிபுத்தூரர் கவிகளின் நடையழகு, சுயமானதென்றே கொள்ளவேணும். தமிழ்ப்பாரதமொழிய வேறுநூல்கள் இவர் செய்ததாய்ப் புலப்படவில்லை. அருணகிரிநாதர் பாடிய கந்தரந்தாதிக்கு அவர் கருத்துக்கிணங்கப்பொருள் கூறியவர் இவரே. இவர் அப்போதுக்கப்போது பாடிய தனிப்பாடல்களைத் தொகுத்துவைத்தவர் யாருமில்லை. காலகதியால் மறைந்தனபோலும். இவர் ஏராளமாகத் தமக்குச் செல்வமும் பரிசுங்கொடுத்து நெடுகிலும் ஆதரித்து வந்தவராகிய ஆட்கொண்டானென்னு மரசனை தாந்தமிழிற்பாடிய பாரதத்துள் யிடையிடையே புகழ்ந்துள்ளார். இதனை நரஸ்துதியெனக் கொள்ளாது உபகார ஸ்மிருதியெனக் கொள்ளலே சிறப்புடைத்தாம்.

வில்லிபுத்தூராருக்குப் பெயர் வாய்ந்தவழியா தெனிலோர் கூறுதும். வைஷ்ணவப்பிராமணர் களுள் விஷ்ணுவின் பல்

நாமங்களிலொன்றைத் தமக்கு பெயராக வழங்கிவரும் ஓர்பு ராதன வழக்கமுண்டு. சிலதலங்களில் கோவில் கொண்ட மூர்த்திகளின் பெயரை ஆண்பிள்ளைகளுக்கும் அத்தலங் களின் பெயரை பெண்பிள்ளைகளுக்கும் நாமங்களாக வழங்கி வரும் விசேஷ வழக்கமுமுண்டு. அத்தலங்களில் வரம்பெ றுங்காரணத்தால் இவ்விசேஷப் பழக்கம் நடைபெருகின்றது. காரியெனுஞ் சிற்றரசன் திருக்குறுங்குடியில் வரங்கிடந்து நம்மாழ்வாரைப் பெற்றதால் நம்மாழ்வாருக்கு அத்தலத்தின் மூர்த்தியாம் நம்பியெனும் நாமமுண்டு, அந்நம்பி குருகூரில் வந்து பிறந்தமையால் குருகூர் நம்பியென்று வழங்கிவரு கின்றது. மதுரைகவி யாழ்வார் பாடியருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பு எனும் பிரபந்தத்துள் இப்பெயர் காணப் படுகின் றது. ஆழ்வார்கள் பெயரை வைணவர்கள் தம்பெயராக வழங்குதலுமுண்டு. ஆழ்வாரையங்கார் ஆழ்வார் செட்டி ஆழ்வாரையா என வழங்குதல் காண்க. நம்பியென்பது ஆடவர்களிற்சிலர்க்கும் குறுங்குடியென்பது மகளிற்சிலருக் கும் இன்றும் வழங்கிவருதலுண்டு.

இப்பெயர்கள் காரணம் பற்றி வரும்பெயர்களாம். பெ ரியாழ்வார், பட்டர்பிரான், வில்லிபுத்தூராழ்வார் எனும் முப் பெயர்கொண்ட ஆழ்வாரின் வரப்பிரசாதத்தால் தோன்றிய காரணத்தால் வில்லிபுத்தூராரென்பது தகப்பன் வைத்தபெய ராகலாம். அல்லது பெற்றோர் பலநாள் அவ்விடஞ்சென்று வசித்ததினாலோ தலவாசஞ்செய்ததி னாலோ அல்லது தம் பந்துக்களிடம் அங்குவதிந்ததினாலோ வில்லிபுத்தூரரெனும் பெயர் வாய்ந்தமைக்கு மற்றோர் காரணமுமாகலாம். வில்லி புத்தூராழ்வார் வரப்பிரசாதத்தால் தோன்றிய காரணத்தால் விஷ்ணுசித்தன் எனும் வடமொழிப்பெயரைப் பிதா நாமகர ணம் செய்திருக்கின்றனர்; ஏனெனில் வில்லிபுத்தூராழ் வார் தோன்றிய வெகுகாலத்திற்குப் பிறகேதமிழ்ப்பாரதம்

பாடிய வில்லிபுத்தூரர் பிறந்துள்ளார். விஷ்ணுசித்தரென் பது சர்மா. வில்லிபுத்தூரரென்பது அழைக்கும் பெயர். வில்லிபுத்தூரரென்பது ஒருவரையே மரியாதையாகச் சுட் டுந்தமிழ்ப்பெயர். வில்லிபுத்தூரரின் தம்பியின் பெயர் யா தோ விளங்கவில்லை. வீராகவரென்பது தகப்பன் பெயர். அது ஆசாரியன் பெயராகாதோ வெனிற் பிரமோதோ பசஞ் செய்யும் முதலாசாரியர். பிதாவாதலின் அவரே குருவாகத் தடையில்லை. வெங்கடேசனென்பது சர்மா. அழைக்கும் பெயரோ திருமலையாம். இது தமிழ் நாட்டுவழக்கு.

---

## வில்லிபுத்தூரர் பாரதம் பாடியது

---

வடகொங்கை சார்ந்த திருமுனைப்பாடிநாட்டின் அரசனா கிய ஆட்கொண்டான் மூன்று தமிழ்ச்சங்கங்களிலு மோங்கிய தண்டமிழாராய்ச்சியில் நோக்க முள்ளவனாய் யாரும் தமிழ்க் கலா விநோதனென்று புகழும்படி, தமிழ் நூல்களைப் பற்பல புலவர் குழாத்திடையாராய்ச்சி செய்துவந்தான். நந்திமால் வரையென்பது இவன்நாட்டு மலை. அதிலிருந்து பெருகிவ ரும் நதி பெண்ணைநதியாம். வக்கபாகை யென்பது தலை நகர். இவ்வரசனுக்கு ஆண்டரான் பிள்ளையெனவும் மற் றொரு பெயருண்டு. இவன் பாரதத்தை தமிழில் இனியபா டல்களாகப் பரிடவிக்க வேண்டுமென்று நினைத்துத் தன்பக் கத்திலிருந்த புலவர்களைப்பார்த்து, அவ்வாறு பாடல் புரி யத்தக்க புலவர் பிரான்யாருளரென்று வினவினான். இனிய கவிபாடும் புலவர்களுள் தலைமைபெற்றவர் சனியூர் வில்லி புத்தூரரென்று அவர்களெல்லோரும் ஒரே தொனியாய்க் கூறினர். அவர்திருமாலை வழிப்படும் பத்தர் சிகாமணியெ ன்றும் பிறப் பொழுக்கமும் அந்தண்மையும் குடிகொண்டது போல அவரிடத்துதிக் கல்வியுஞ் செல்வமும் நிலைத்துளவெ

றும் அப்புலவோ ரனைவரும் கூறினர். இவ்வில்லி புத்
ரர் கல்வித்திறத்தை இவர் குமாரர் வரந்தருவார் பாயிரத்
்பாடிய இரண்டுபாடல்கள் இனிதுவிளக்குகின்றன. அப்
டல்களாவன :—

கவிகள்.

ஐந்து பாவுடை நால்வகைக் கவிக்கதி பதியாய்
வந்து வட்டமா மணியினன் மணிமுடி புனைந்து
மைந்து மூாய்முடிப் பரமனைப் பலகவித் துறையுஞ்
சிந்தை யான் மொழிந் தன்பர்தம் திருவுளம் பெற்றோன்.

தென்னர் சேரளர் செம்பிய ரெனப்பெயர் சிறந்த
மன்னர் மூவரும் வழங்கிய வரிசையா லுயர்ந்தோன்
முன்ன ரெண்ணிய முத்தமிழ்ப் பாவல ரெவரும்
பின்னர் வந்தொரு வடிவுகொண் டனரெனப் பிறந்தோன்.

வில்லிபுத்தூராரும் அவர் சகோதரரும் மதுரையிற் பா
ரடிய அரசனிடம் சென்று தமிழ்க்கலைவாணருடன் சின்
ாள் அங்கு வதிந்து வந்தனர். இத்தருணத்தில் வில்லி
த்தூரார் குலத்தவளாம் ஒருகிழவியை வரவழைத்து நீ வில்
்புத்தூரார் மனைக்கேகி அவர்மனைவி அவர்தம்பி மனைவி
ளுக்குள் கலகமுண்டாக்கி அவர்களின்பார்த்தார்கள் மதுரை
யிலிருந்து திரும்பிவரும்போது, குடும்பக் கலகத்தால் பாக
மூக்கொன்று அரண்மனைக் கேரும்படி பக்குவப்படுத்திவர
வேண்டுமென்று பலவகையு பசாரணையுஞ் செய்து கைநிறை
ய் பணமுங் கொடுத்து ஆட்கொண்டா னெனுமரசன்
திட்டம் செய்தான். வழக்குவரின் அவ்வியா ஜத்தைக்
கொண்டு வில்லிபுத்தூராரால் பாரதம் பாடுவிக்கலா மென்று
திட்டாய் எண்ணிக் கொண்டிருந்தனன். கைம் பெண்ணும்
வுக்கிழவியும் சனியூரில் வில்லிபுத்தூரார் மனைக்கேகி அவர்
பெண்சாதி அவள் ஓர்ப்படி இவர்களிடம் முதலில் அன்பு
ாராட்டிப் பிறகு அவ்விருவர் மனதையும் கல்லைக் கரைப்
பது போற்கரைத்து அவர்களுக்குள் தீராதவிரோதம் விளை

வித்து அவர்கள் புருடன்மாருடன் இனித் தனித்தனியாய்ப் பாகம் பிரித்துக் கொண்டு வசிக்கவேண்டியதே யன்றிச் சேர்ந்து வசிப்பதில்லை யென்று நிச்சயம் செய்து கொண்டார்கள்.

சிலநாள் கழிந்தமேல் இவ்விருமடந்தைமாரின் கணவன்மார் மதுரையினின்று திரும்வந்தார்கள். வீட்டில் பூனையும் எலியும் போல் இரண்டுபெண்களு மிருப்பதை நேரிற் கண்டு இனிப்பாகம் பிரிந்தாலன்றி வீட்டின் நிலை சீராகாதென்று நிச்சயித்துக்கொண்டு அரசனிடம் பாகவழக்குத்தொடர்ந்தார்கள். அரசன் வில்லிபுத்தூரரையும் அவர்சகோதரரையும் நோக்கி நீங்களிருவரும் தமிழிற் கவி பாடுவதிற் சிறந்தவராதலால் தமிழில் மாபாரதத்தைப் பாடினுல் உங்கள் குடும்பத்தில் பாகம்பிரிய வந்துள்ள வழக்கைத் தீர்த்து வைப்பேன் என்றுன். வில்லிபுத்தூரர் அதற்கு உடன்பட்டமையைப் பின்வருங்கவி விளக்குகின்றது.

கவி.

முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்.

இவ்வாறு வில்லிபுத்தூரரும் அவர் சகோதரரும் ஆட்கொண்டானிடம் சிலகாலம் தங்கியிருந்து அவன் வேண்டுகோளின்படியே பாலுமமுத முப்பழச்சாறும் கைக்குமென்னலாம் படிச்செம்பாக மனமந்த சந்தக்கவியாக மிகநயங்குடிகொண்ட பாடல்களால் தமிழ்ப்பாரதத்தை 6000-ம் பாடல்களாகப்பாடி முடித்தனர். இப்படிப்பாடி யுள்ளாரென்பதற்குக் கர்ணபரம்பரையாய்க் கிடைத்துள்ள பழம்பாடலுமொன் றுண்டு. அதுவருமாறு.

## ஆறுசீராசிரியம்.

கலியுக வியாதன் சொல்லக் கணபதி யெழுது பாடல்
பொலிவுறு தமிழி னுரு யிரமென விருத்தம் போற்றிச்
சலிவற வில்லி புத்தூரிறைவனும் சார்வ பூமன்
ஒலிகெழு மறையோர் கோமா னுயர்ந்தவ ருவப்பச் சொன்னான்

ஆறுமுகநாவலர் பதிப்பித்துள்ள வில்லிபுத்தூரார் பாரதத்தில் 4,351—செய்யுள்கள் மட்டும் காணப்படுகின்றன. எஞ்சிய 1649—செய்யுள்களும் அச்சியந்திர வாயிலாக இன்னும் வெளிப்படவில்லை. ஏட்டுப்பிரதி எங்குளதோ அதுவும் புலப்படவில்லை. சிலர் வில்லிபுத்தூரரின் குமாரர் வரந்தருவார் தான் பாரதத்தின் பிற்பகுதியைத் தமிழக் கவிரூபமாகப்பாடியுள்ளாரென்றும் வரந்தருவார் பாரதமென்று அதுவழங்குகிறதென்றும் ஆனால் அச்சிற் பதிப்பாகவில்லை யென்றுங் கூறுகின்றனர். ஆதிபருவத்தில் சந்தனுமகாராசன் சரித்திரம் முதல் சௌத்திகபருவத்தில் பதினெட்டாம் நாளிரவில் நடந்த பாசறையுத்தம் வரையில் அச்சிடப்பட்டு வழங்கிவருவதுதான் வில்லிபுத்தூரர் பாரதமெனப்படுகின்றது. அரசன் வில்லிபுத்தூராரின் சகோதரரையும் பாடும்படி கேட்டுக்கொண்டதால் வில்லிபுத்தூரர் பாரதத்தின் பின்பாதியைப் பாடாது விட்டுவிட்டனர் போலும். பிறகு அரசன் பாரதம்பாடிய இவ்விரு சகோதரரையும் நோக்கிப் பாரதம் தமிழ்ப்பாவாக அமையவேண்டி உங்கள் குடும்பத்தில் பாகவழக்கொன்று தலையெடுக்கும்படி நானேசெய்வித்தேன் மன்னியுங்களென்று வேண்டிக்கொண்டனன் வில்லிபுத்தூரர் தனக்கினிப்பாகம் வேண்டியதில்லை யென்றும் தான் இனிச்சந்தத் தமிழ்க்கவி பாடி நாடெங்குந்தமிழ்ப்புலமை பாராட்டி வருவேனென்றும் தன்னெதிரில் தமிழ்ச்சந்தக் கவிபாடத்தெரியாது தோல்வியடைவோர் காதைக்கொய்தெறிய ஓர் வாளாயுதம் உதவும்படி அரசனைப்பார்த்து வேண்டிக் கொண்டனர். அரசனும் அவ்வாறே தமிழ்ப்புலமைக்கு ஓர்பிருதாக, ஒரு வாளாயுதம்

வினன். வில்லிபுத்தூராரும் தோல்வியடைந்த பலர் காதுகளையும் கொய்து வெற்றிகொண்டு விளங்கினர். அந்தக் கவிவீரராகவ முதலியார் பின்வருமாறு இவர் செய்கையையும் புலமையையும் விளக்கியுள்ளார்.

எண்சீராசிரிய விருத்தம்.

குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னிங்கில்லை
குறும்பியளை வாக்காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
இரண்டொன்று முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ வறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே.

அரங்கநாத கவிராயரென்பவர் பாரதத்தின்பிற் பகுதியை 46 சருக்கங்களாகச் சொர்க்காரோகணச் சருக்கம் முடிய 2477 செய்யுளாகப் பாடியுள்ளார். அது 1902ஆம் சென்னை பண்டிதமித்திர யந்திரசாலையில் பதிப்பிக்கப் பட்டுள்ளது. இதில் வரந்தருவார் பாடியதென்று சொல்லும் மற்றொருபுத்தகத்திலுள்ள 8 செய்யுள்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. அரங்கநாத கவிராயர் பாடியபாடல்.

ஆறுசீராசிரியம்.

பைந்தமிழி னலஞ்சிறந்த முனைப்பாடித் திருநாட்டிற்
பாகை வேந்தன்
சுந்தரஞ்சேர் பாரதமாம் வடகலையைத் தென்கலையாற்
சொல்க வென்னச்
சந்தனுவின் சரிதைமுதற் பதினெட்டா நாட்போரின்
சரிதங் காறும்
புந்திமகிழ் தரவில்லி புத்தூராழ் வான்முன்பு
புகன்றிட் டானே.

---

வரந்தருவார் கூறுவதோ இதற்கு மாறாகவுள்ளது.
வர்பாடிய செய்யுள் :—

அறுசீரா சிரியம்.

பிறந்துய்யக் கொண்டவனிப் பேருலகம்
பெருவாழ்வு கூரு நாளி
னிறைந்தபுகழ்ச் சனிநகர்வாழ் வில்லிபுத்தூ
ரனைநோக்கி நீயுநாளும்.
பிறந்ததிசைக் கிசைநிற்பப் பாரதமாம்
பெருங்கதையைப் பெரியோர் தங்கள்
சிறந்தசெவிக் கமுதமெனத் தமிழ்மொழியின்
விருத்தத்தாற் செய்க வெனுரன்.

தனுல் ஆட்கொண்டான் வில்லிபுத்தூர ரொருவரையே ரதம்பாடும்படி வேண்டிக் கொண்டமை வெளியாகின்றது. ிழ்ப்பாரதம் முழுமையும்பாடி யவர் ஒருவர்தானே அல் து இருவரோ அவ்விருவர் வில்லிபுத்தூராரும் அவர்குமாரர் ரந்தருவாருமோ என்பதைத் திட்டமாய்க் கூறப் போது னசாதனங்கள் இன்னும் வெளியேறவில்லை. காட்டிய ்பாடலினுல் ஆட்கொண்டானும் வில்லிபுத்தூராரும் ஒரே ரில் ஜனித்தவர்க ளென்பது வெளியாகின்றது.

வில்லிபுத்தூரார் காலத்திருந்தபுலவர்கள் பலர் அர்களுட் ர்பெயர்மட்டும் இப்பொழுது புலப்படுகின்றது. அநந்த ான் பாஞெருவன். இவர் வில்லிபுத்தூரார் எடுத்த சந்தக் ிப்பின்படி பாடியதில் வழுவுற்றது. உடனே வில்லிபுத் ரர் அவர்காதை ஒட்டஅறுக்க ஆரம்பித்தனர். உடனே ால்வியுற்றவன் என் காதுகள் நீங்குமாயின் நீங்கள் என் யர் அந்தனென்பதை இனிதுவிளக்கி எம்மை ஆதிசேட ்குகின்றீர் களென்று வில்லிபுத்தூரரைநோக்கிக்கூறினன். வசன சாதுரியத் தைக்கேட்டு வில்லிபுத்தூரர் அவன்கா ளை அறுக்காது விடுத்தனர். மற்றொருத்தன் சம்பந் ண்டான் என்பவன். இவன் சமணசமயத்தான். இவன்சத்தி

பூசைசெய்பவன். மந்திரம் பெரிதுங்கற்றவன். தமிழின் சுவை பதியாதநெஞ்சன். இவன் அருணாசலத்தில்வாசம்செய்தனன். அருணகிரிநாதரோடு வாதம்செய்து தோல்வியுற்று அருண கிரியைவிட்டு வெளியேசென்றவன். இவன் இரட்டையர்களை வெருட்டியபோது மன்னென்றெடுத்து மலுக்கென்றொரு வெண்பாப் பாடுங்களென்றனன்.

இரட்டையர் பாடியவெண்பா.

*மன்னுதிரு வண்ணா மலைச்சம்பந் தாண்டார்க்குப்*
*பன்னுந் தலைச்சவரம் பண்ணுவதேன்-மின்னின்*
*இளைத்த விடைமாத ரிவன்குடுமி பற்றி*
*வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு*

இக்கவியைக் காளமேகன்பாடிய தெனச் சிலர் மயங்குவர்.

மற்றொருத்தர் அருணகிரிநாதர். இவரோடு வில்லிபுத் தூரார் அருணகிரியில் வாதம்செய்தனர். அரசன் பிரபுடதே வன். அக்காலத்தில் அருணகிரியிலிருந்தவன். இவன் வில்லி புத்தூராரின் கல்வியின் பெருமையையும் விருதுமுதலிய சிறப் புக்களையும் நன்குமுணர்ந்தவனாலும் அவர் புலவர்களைக் காதறுப்பதை நீக்கிவிட எண்ணங்கொண்டு இரகசியத்தில் அருணகிரிநாதரிடம் பக்ஷம்வைத்து, இவ்விரண்டுபுலவர்களும் சேர்ந்தபோது, அருணகிரிநாதரைக் கந்தருக்குஅந்தாதி யொன்று பாடச்சொல்லி வில்லிபுத்தூரரை அதற்கு உரை கூறிவரும்படி செய்தான்; வில்லிபுத்தூராரும் பெரும்பாகத் திற் குறைகூறிக்கொண்டு வந்தனர். "திதத்த" வெனும் பாடலை அருணகிரிநாதர்கூறினார். அது ஏகாக்ஷரப்பாவாதலா லும் கந்தன் வரப்பிரசாதப்படி அதில் நடன ஒலிக்குறிப்பை நாட்டியிருந்ததாலும் வில்லிபுத்தூரார் பொருள்கூறச் சற்றுத் தயங்கினர். அருணகிரிநாதர் பிறகு விளக்கிக்காட்டினர். மற் றைய பாடல்களையும் கூறினர். அவைகளுக்கு எல்லாம் வில்லிபுத்தூரார் பொருள்கூறி முடித்தார். அங்குள்ளார், அருணகிரிநாதரை நோக்கி வில்லிபுத்தூரார் தோற்றமையால்

அவர்காதைக் கொய்துவிடுங்க ளென்று தூண்டிவிட்டனர். பிரபுடதேவனும் அரசன் இத்தருணத்தில் அருணகிரிநாதர் கையிலிருந்த வாளைக்கைக் கொண்டனன். அருணகிரியார் செவியைக் கொய்யாமலே யரன் கொடுத்த செவியாய் விளங் கலாமென்றனர். பிறகு அரசன் இரண்டுபுலவர்களையும் சமா தானமாக்கிவிட்டான் வில்லிபுத்தூராரும் தமது விருதுடன் தமதூர்க்குச்சென்று, அன்றுமுதல் புலவர்கள் காதுகளைக் கொய்வதொழித்து தம்புலமையை நாட்டிக் கொண்டிருந்த னர்.

இனிவில்லிபுத்தூரார்தமிழ் நாட்டில் விளங்கிய காலத் தைப்பற்றியோவெனில் அவர்பாஷைநடையால் தூப்புல் வே தாந்த தேசிகராம் வேங்கடநாதாசாரியரின் காலத்திற்கு முன் னுள்ள காலமென்பது குன்றின்மேல் வைத்த, பொன்றுத லில்லாத் தீபவொளிபோல் விளங்குகின்றது. அவ்வேங்கட நாதாசாரியர் காலமோ இற்றைக்கு 635 வருஷங்களுக்குமுந் தியதென்று விளக்கப்பட்டுள்ளது. வைணவர்களின் சமயா சாரியாராகிய இராமாநுஜர் மைசூரில் கி. பி. 1113ம் ஆண் டில் அரசாண்ட விஷ்ணுவர்த்தநன் காலத்தில்மேல் சோ ட்டையெனும் திருநாராயணபுரத்தில் வாசஞ்செய்த வாரா தலின் வில்லிபுத்தூரார் விளங்கிய காலத்தில், இராமாநுசா சமயாசாரியராக நாடெங்கும் போற்றப்படவில்லை யென்று காணப்படுகின்றது. இராமாநுஜர் தோன்றியகாலத்திற்குப் பிறகு வில்லிபுத்தூரார் காலமிருந்திருத்தல் வேண்டும். இரா மாநுஜர் இன்றைக்கு 889ஞுங்களுக்குமுன் தோன்றியுள் ளாராதலின் வில்லிபுத்தூரார் இன்றைக்கு 650 அல்லது 700 ஞுங்களுக்குமுன் விளங்கிய வராதல் வேண்டும். வில்லிபுத் தூரார் பாடியதமிழ்ப்பாரதத்தில் இராமாநுஜருக்கு வணக்கத் கூறுதல்விடுத்து மங்கைமன்னனுமாழ்வார்க்குமட்டும் வணக் கங்கூறியுள்ளார். இராமாநுஜர் இம்மண்ணுலகில் 120ஞு ஜீவித்திருந்தபடியால் அவர் சரமதசை இன்றைக்கு 769

ஷூங்களுக்கு முன்னுகின்றது. அவர்பரமபத மடைந்தமேல் அவரைவைணவர்கள் சமாசாரியராக அதிகமாய் எங்குங்கொண்டாட அவர்செய்த ஸ்ரீபாஷியம் நாடெங்கும் பரவிவமேல் அதாவது அவர் பரமபதமடைந்தபின் 60 அல்லது 70 ஷூ சென்ற மேல்தான் அவரை எல்லாரும் சமயாசாரியராக வழங்கும் வழக்கம் நடைபெற்றிருந்தல் வேண்டும். வேங்கட நாதாசாரியர் ஸ்ரீராமாநுஜர் திருநாட்டிற் கெழுந்தருளிய பிறகு 134 ஷூங்களுக்கப்புறந்தான் இம்மண்ணுலகில் தோற்றமாயினர். இந்நிரூபணத்தால் வில்லிபுத்தூரர் காலத்து ஸ்ரீராமாநுஜர் சமயாசாரியராகப் பிரபலமாய் எல்லாராலும் தோத்திர ரூபமாக வணங்கிவரப்படவில்லை யென்பது வெளியாகின்றது.

வில்லிபுத்தூரரின் கவிகளொவ் வொன்றுமே சொற்கட்டு, சந்தவின்பம், தெளிவு, தண்ணென்றிருத்தல், நல்லொழுக்கம், நவரசப் பொலிவு முதலிய நயங்களால் மலிருந்திருப்பினும் மாதிரிக்காகச் சிலபாடல்கள் வருமாறு:—

பேராறு மூழ்கி மறைநூல் பிதற்றி மிடறும் பிளந்து பிறவித்
தூராறு மாறு நினையா மலுங்க டொழிலே புரிந்த சுமட
ரேராறுபேத சமயங்களுக்கு முருவாகி நின்ற வொருவ
னீராறுநாம முரைசெய்து மண்கொ டிடுவார்கள் காணுமி
[மையோர்.

---

அரியதண் கலைவாண் மதியமுங் கொதிகொ ளாலமுந்
  தனதிடத் தடக்கி
யுரியவொண் கங்கா நதிக்கொரு பதியா யுரைபெறு
  முயர்மகோ ததியிற்
பரியதிண் சிலையோ டம்பெலா முகந்து பற்குனப்
  பொருப்பிடைப் பொழியுங்
கரியபைம் புயலைக் கைதொழு மவரே கருவிலே
  திருவுடை யவரே.

---

கன்னி யிவள்பிறர் பன்னி யெனதிரு கண்ணின் மணிநிகர் சன்மறு
மன்னுகுலமுதல் பின்னையொருவருமன்னி னுறுதுணையின்மையால்
இன்னல் பெரிதுள தென்ன புரிகுவதென்ன வறிகில னன்னைகேள்
முன்னமனைநிகழ் தன்மமுனிவனை முன்னிவிடர்நனிதுன்னுமால்.

நனியாட லனற்கடவுள் யமன் நிருதி நண்ணுதிசை நாள்கடோறு
முனியாம லடந்திளைத்து முன்னையினும் பரிதாப முதிர்ந்ததென்று
தனியாழித்தனிநெடுந்தேர்த் தனிப்பசசைநிறப்பரியைச்சயிலராசன்
பனியாலவ்விடாய்தணிப்பான் பனிப்பகைவன் பனிசெய்வோன் பக்
[கஞ் சார்ந்தான்.

நாற்றிசை யுலகந் தன்னில் நான்மறை யுணர்ந்தோர் தாமும்
போற்றிசை மாலையென்னும் பொற்புடை யணங்கு வைக
மாறறிசை விலாத செம்பொன் மண்டபந் தன்னி லாதி
மேற்றிசைக் களவுளிட்ட வெயின் மணிப்பீடம் போன்றான்.

கொண்டமென் சிறைவண்டென்னுங் கொழுநருக் கிடங்கொடாமல்
முண்டகக்குலத்து மாதர் முகங்குவிந் தூடி நிற்பக்
கண்டெதிர் நின்ற காதற் கயிரவக் கணிகை மாதர்
வண்டுறை நின்று தங்கள் வாய்மலர்ந் தழைக்க லுற்றார்.

கானெலா மலர்ந்த முல்லை ககனமீ தெழுந்த தென்ன
வானெலாம் வயங்குதாரை நிரைநிரை மலர்ந்து தோன்ற
வேனிலான் விழவின் வைத்த வெள்ளிவெண் கும்ப மென்னத்
தூநிலா மதியம் வந்து குணதிசை தோன்றிற் றம்மா.



கானெலாம் என்று ஏழாஞ்செய்யுளில் குணதிசையில் சந்திரன்றோன்றிய சிறப்பு வர்ணிக்கப்பட்டுள்ளது.

பேராறு மூழ்கியொனு முதற்கவி வழிபடு தெய்வ வணக்கங் கூறுவதாயினும் ஓசையின்பமும் பத்திமேம் பாடுங்கொண்டு ஒளிருதல் காண்க.

அரியதண் என்ற இரண்டாங்கவியும் வழிபடு கடவுள் வணக்கமே யாயினும் திருமாலெனும்புயல் கடலில் முகந்து பொருப்பில் பொழிவதாகக்கூறும் வகையானே சிவபிரான் அருச்சுனன் இவர்களின் சிறப்புப் பொருள் நயம் பொலிய அமைந்திருத்தல் வெகுபொருத்தமாயிருத்தல் உணர்க.

கன்னி என்ற மூன்றாங்கவி பிரகிருதிச்சந்தத்திற்கு உதாரணமாய் இனிய ஓசைகொண்டொளிர்தல் காண்க.

நனியாடல் எனும் நான்காங்கவியில் ஞாயிறு உத்தராயணகதிக்குத் திரும்புதலுக்குக் காட்டியுள்ள காரணம் முன்பு யாருமெடுத்தாளாத கருத்தமைதி கொண்டிருத்தல் காண்க பாடுதலில் வில்லிபுத்தூர்றகுச் சுயஞ்சத்தியுண்மை இதனால் விளங்குகின்றது.

நாற்றிசையென்று துவக்கும் ஐந்தாங்கவியில் மாலைப் பொழுதில் சூரியன் நிலைசிறப்பிக்கப்பட்டுளது.

கொண்டமென் என்ற ஆறாங்கவியில் தாமரை முகங் குவிதலும் ஆம்பல் இதழ்விரிதலும் குலமாதர் கணிகைமாதர்களின் தொழில் களைப்போலுமெனக்கற்பனை நயங்காட்டப் பட்டுளது.



# பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்.



இவர் சோழ நாட்டில் திருமங்கையெனும் ஊரிலே வைணவப்பிராமண குலத்திலே பிறந்தவர். இவர் இளவயது தொட்டு தமிழில் இலக்கண இலக்கியங்களில் பிரிய முள்ளவராய்த்தக்க ஆசாரியரை அடுத்து பலநூல்களையும் கற்றுணர்ந்து செம்பாகமாக தமிழ்க்கவி பாடும் புலவரானார். இவரது கல்வித்திறத்தைக்கண்டு மதுரையில் அக்காலத்தில் அரசு, புரிந்த திருமலைநாயக ரென்பவர் தம்மரண்மனையில், இவரை ராயசவேலையில் அமர்த்திக் கனப்படுத்தினார். இப்பிள்ளைப்பெருமாள் இராமாநுஜ நூற்றந்தாதிபாடிய திருவரங்கத் தமுதனாரின் வம்சத்திற் பிறந்தவர். கோனேரி அப்பனையங்காரென்பவர் இவர்பேரன். இது சீரங்கநாயகியார் ஊசற்றிருநாமத்தால் விளங்குகின்றது இவரது குலத்தில் இவருக்கு முன்னாகவும் பின்னாகவும் பத்திமிகுந்த கவிபாடும் பாகவதர்கள் உள்ளார் என்பது வெளியாகின்றது. இதனால் இவ்வையங்கார் தொன்று தொட்டுச் சிட்டாசாரமுள்ள வைணவ குலத்தில் தோன்றியவர். "குலத்தளவே யாகுங்குணம்" எனும் ஔவை வாக்கின்படி குலத்துக்கேற்ற ஒழுக்கமுள்ளவராகியும் விளங்கினார்.

இவர்வீம்புக்கு வேடங்கொள்ளாது உண்மையாகவே மனத்திடங்கொண்ட வீரவைணவர். நம்பெருமாள் குமாரரெனபட்டருக்கும் பெயர்வாய்ந்தது போல் இப்பிள்ளைக்கும் பெயர்வாய்ந்தது. பெருமாளின் அருளால் தோன்றியவராதலின் பெருமாள் பிள்ளையாகி அம்மொழிகள் பிறகு மொழி மாற்றாய்ப்பிள்ளைப் பெருமாளாயது. இவர்திருமாலின் சரணங் கமலங்களில் ஈடுபட்டுப் பத்திமேலீட்டால் தமது உபாசனா மூர்த்தியாய் திருவரங்க நாதனையே பரம்பொருளெனக் கொண்டு வேறுவைணவமூர்த்திகளின் வடிவம் சரித்திரங்களில் மனமோடாது திடமாய் நின்றமையால் இவரைவீரவைணவ ரென வழங்க இடமுண்டாயது.

இவர்பாடிய பின்வரும் திருவரங்கக்கலம் பகப்பாவால் இவர்க்குள்ளதிறமையைப் பாவலரும் புகழ்ந்திருக்கிறார்கள்.

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பத்தியின் பெருமை.

பாதியா யழுகிய கால்கைய ரேனும்
பழிதொழிலு மிழிகுலமும் படைத்தா ரேனும்
ஆதியா யரவணையா யென்ப ராகி
லவரன்றோ யாம்வணங்கு மடிக ளாவார்
சாதியா லொழுக்கத்தான் மிக்கோ ரேனுஞ்
சதுர் மறையால் வேள்வியாற் றக்கோ ரேனும்
போதினன் முகன்பணியப் பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்றாதார் புலையர் தாமே.

கோயிலென்பது, வைணவருள் அரங்க நகரைச் சுட்டும் பெயர். அரங்கனைப்புகழ்வாரும் பணிவாருமே வைகுண்டத்திலுள்ள திருமாமணி மண்டபத்தைபெற்றவராவரென்று இக்கலம்பகத்திலே வேறொருகவியிலும் விளக்கப்பட்டுள்ளது. அக்கவி வருமாறு;—

எண்சீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

பத்தியில்லாத கல்வி பயனற்ற தென்பது.

கற்றா ரெனினும் பதினா லுலகுங்
கண்டா ரெனினுந் தண்டா மிருபற்
றற்றா ரெனினுந் திருமா லடியா
ரல்லா தவர்வீ டில்லா தவரே
பொற்றா மரையாள் கணவன் றுயிலும்
பொற்கோ யிலையே புகழ்வார் பணிவார்
மற்றா ரெனினும் பெற்றா ரவரே
வானோர் திருமா மணிமண் டபமே.

இவர் கவி பாடுந்திறத்தை விளக்க இவர் பாடியபாடல்களிற் சில வருமாறு;—

வெண்பா.

புயநான் குடையானைப் பொன்னரங்கத் தானை
அயனுந் திருவுந்தி யானை—வியனும்
பரகதிக்குக் காதலாய்ப் பாடினேன் கண்டீர்
நரகதிக்குக் காணுமனன்.

நேரிசை வெண்பா.

சிறந்ததேன்.

சிந்திக்கத் தித்திக்குஞ் செவ்வாய் துவர்த்துப்பாம்
புந்திக்கு ளேயின் புளிமேவு—நந்தம்
கருவரங்கங் கைத்தழலுங் காவிரியி னூடே
திருவரங்கத் தேவளருந் தேன்.

தெய்வவல்லமை.

எழுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

மண்டலமும் விண்டலமு நின்றவா குன்றமும்
வளைந்த மலையுங் கடலுமு
தண்டமு மகண்டமு மயின்றவர் துயின்றரு
ளரும்பதி விரும்பி வினவில்
கொண்டல் குமுறுங்குட கிழிந்துமத குந்தியகில்
கொண்டுநுரை மண்டிவரு நீர்
தெண்டிரை தொறுந்தரள முங்கனக முஞ்சிதறு
தென்திரு வரங்க நகரே.

நேரிசை ஆசிரியப்பா.

பத்துத்தாமரையின் அதிசயங்கள்.

கரைபெரு தொழுகுங் காவிரி யாறே
ஆற்றிடைக் கிடப்பதோ ரைந்தலை யரவே
அரவஞ் சுமப்பதோ ரஞ்சன மலையே
அம்மலை பூத்ததோ ரரவிந்த வனமே
அரவிந்த மலர்தொறு மதிசய முளவே
கடல்விளிம் புடுத்த கண்ணகன் ஞாலம்
இடன்முழு தளந்த தொருதா மரையே
வகிரிளம் பிறையான் வார்சடை தேங்கப்

பகிரதி காண்றதோர் பங்கே ருகமே
யாவையும் யாரையும் படைக்க நான்முகக்
கோவை யீன்றதோர் கோக னகமே
திருமகட் கினிய திருமனை யாகிப்
பருமணி யிமைப்பதோர் பதும மலரே
சடைத்தலை தாழ்த்துச் சங்கர னிரப்ப
முடைத்தலை தவிர்த்ததோர் முளரிமா மலரே
ஆங்குமண் டோதரி யணிந்தமங் கலநாண்
வாங்கவில் வாங்கிய வனசமு மொன்றே
விரிந்தபுக ழிலங்கை வேந்தற்குத் தென்றிசை
புரிந்தருண் மலர்ந்ததோர் புண்ட ரீகமே
மண்டிடு ஞாலமும் வானமு முட்பட
அண்டமுண் டுமிழ்ந்ததோ ரம்போ ருகமே
கடைசிவந் தகன்று கருமணி விளங்கி
இடைசில வரிபரந் தினியவாய் நெடியவாய்
இன்பந் தழீஇய விருபெருங் கமலம்
துன்பந் தழீஇய தொண்ட னேனையும
உவப்புட னொருகா னோக்கிப்
பவக்கடல் கடக்கும் பரிசுபண் ணினவே.

எழுசீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

கருணைக்கடல்.

ஒருபொரு ளல்லேன் இருவினை யுடையேன்
　　உனதுதோண் டெனுந்துறை குளித்துன்
பெருகுதண் ணளியின் பாசந்தொட் டிழிந்து
　　பெரியதோர் முத்தியான் பெற்றேன்
திருவுமா மணியுஞ் சங்கமு மேந்திச்
　　செய்யதா மரைபல பூத்துக்
கருநிற முடைத்தாய் நதிபொரு தரங்கங்
　　கலந்ததோர் கருணைவா ரிதியே.

பிள்ளைப்பெருமாள் என்பது ஸ்ரீகண்ணன் பெயரெனக் கொள்ளுதலும் ஒரு நன்னயப்பொருளாம். மணவாள தாச னென்பதும் அழகிய மணவாளனும் அரங்கர்க்குத் தாசனு னவனென்று பொருள்படுவதால் பிள்ளைப் பெருமாளுக்கு

மற்றொருபெயராகின்றது. நாமகரணஞ்செய்த பெயர் "ரங்கநாததாசன்" என்பது. மணவாளன் என்பது அரங்கன்பெயராதலால் மணவாளதாசன் ரங்கநாததாசன் என்பன ஒரே பொருள்கொண்ட மொழிகளாம். வைணவ அந்தணர்களிலெல்லாம் இவர் ஐயங்கொண்டோங்கும் சிங்கம்போன்றவராதலின் பிள்ளைப்பெருமாளாயதென்பர் ஒரு சாரார். இவர் யமககவி பாடுவதில்சிறந்தவர். வேறுவகைக் கவிபாடுவதிலும் பாலுந்தேனு மழுதுங்கைக்கும்படி பாடும் வல்லவராதலிற் கவியுணரும் புலவர்களெல்லாம் இவரைத் திவ்யகவியெனக் கொண்டாடும் சிறப்பு வாய்ந்தவர். அரங்கனையன்றி மற்றொருதேவனை நாவினாற் றுதியேனென்று பாடியுள்ளார். இத்துணிபு யமகவந்தாதியிலுங் காணப்படுகின்றது. அது வருமாறு.

திருவரங்க யமகவந்தாதி செய்யுள் 54-வது.

ஆகம திக்கு முகமேன் முகமுடை யானயன்வாழ்
ஆகம திக்கு நவநீதக் கள்வ வவனிகொள்வார்
ஆகம திக்குளஞ் சேரரங் காவுனை யன்றித்தெய்வம்
ஆக மதிக்கு ளெண்ணே னடியேன் பிறராலாயுமே.

ஒருநாளிரவில் திருமால் இவர்கனவில் தோன்றி உலகமுண்டுமிழ்ந்தவன் தானே என்று அறிவித்து, திருவேங்கடமுடையாரையும் பாடும்படி கட்டளை யிட்டுவிட்டு மறைந்தருளினர். அதை அசட்டை செய்துவிட்டு அரங்கனைப்பாடிய எனதருமைவாக்கால் மற்றோர் குரங்கனையும் பாடமாட்டேனென்றார். மந்திபாய் வடவேங்கட மாமலையென்று பாடல் பெற்றிருப்பதால் அங்கு வாழ்ப்பவரை இவர் குரங்கன் என்றார். திருமாலின் கட்டளையை நிராகரித்ததினால் இவர்க்குக் கண்டமாலை நோயுண்டாயிற்று. இவர் நடுக்குற்றுப் பிறகு திருவேங்கடமாலை - திருவேங்கடத் தந்தாதியெனும் இரண்டு பிரபந்தம் பாடினர்! கண்டமாலைநோய் முதலிற்றோற்றியதெப்படியோ அப்படியே திருமாலருளால் மறைந்து விட்

டது. இவர்பிறகு 108 திருப்பதியந்தாதி அழகரந்தாதி முதலிய நூல்களையும் பாடியுள்ளார்.

இவர் பாடியபிரபந்தங்களாவன:—

| | | |
|---|---|---|
| 1. | திருவரங்கக்கலம்பகம் பாடல்கள் | 105 |
| 2. | திருவரங்கத்தந்தாதி பாடல்கள் | 105 |
| 3. | திருவரங்கத்துமாலை பாடல்கள் | 112 |
| 4. | திருவேங்கடமாலை பாடல்கள் | 103 |
| 5. | திருவேங்கடத்தந்தாதி பாடல்கள் | 101 |
| 6. | அழகரந்தாதி பாடல்கள் | 101 |
| 7. | ஸ்ரீரங்கநாயகர் ஊசற்றிருநாமப்பாடல்கள் | 32 |
| 8. | நூற்றெட்டுத்திருப்பதியந்தாதிபாடல்கள் | 114 |
| | ஆகப்பாடல்கள் | 773 |

இவ்வெட்டுப் பிரபந்தங்களும் தமிழ நாட்டில் அஷ்டப்பிரபந்தமென நடைபெறுகின்றன.

இவ்வெட்டன் றித்திருநறையூர் நம்பிவிஷயமாய் மேகவிடுதூதொன்று பாடியுள்ளார். அது 205 கண்ணிகளடங்கிய ஒரு கலிவெண்பா - காப்பு வெண்பா இரண்டு ஆ 3 கவிகளுள்ளன.

தமது வீரவைணவ நிலையை நாட்டிப் பற்பல சமயங்களிற்பாடிய விடுதிக்கவிகள் 35 அடங்கிய சிறுநூல் ஒன்றும் வழங்கிவருகின்றது அதன்பெயர் பரப்பிர்மவிவேகமென்பது.

திருமலைநாயகர் என்பவர் கி - பி - 1623ஆம் முதல் 1659-ம் ஆம் வரை 36 ஆம் காலம் மதுரையில் அரசாண்டு வந்தார். இவரிடத்தில் தான் ஐயங்கார் ராயசவேலையிலமர்ந்திருந்தார். இதனால் இவர்காலம் நிர்ணயமாகின்றது. நடுவயதிலோ அதற்குச் சற்றுமுன்போ இவர் மதுரையில் வேலையில் நாயகரிடம் அமர்ந்திருத்தல் வேண்டும். இவர்கல்வித்தி

றம் ஏற்படச் சுமார் 25 வருஷ காலம் சென்றிருக்குமென்பது சம்பாவிதமே. இவர் பிறப்பொழுக்கம் குன்றாமல் ஆசாரிய பக்தி திருமால்பக்திகளிற் குறைவின்றிப் பாகவதசிரோமணியாய்த் தேகயாத்திரையை மதுரையில் நடத்திவந்தார். அப்பொழுது ஓரற்புதம் நடந்தது. நாயகர் பலர்சூழ ராஜசபையிலிருக்கையில் ஐயங்காரும் தம்தொழிலை நடாத்திக்கொண்டிருந்தனர். அவர்களிடையே திடீரென்றெழுந்து தமது உத்தரீயத்தைக் கையிற் பிடித்துக்கொண்டு இரண்டு கைகளினாலும் கிருஷ்ணகிருஷ்ண வென்று தேய்த்தார். அங்குள்ளாரிவரைநோக்கி என்செய்தீர் பிரமைகொண்டீரோ வென்று கேட்டார்கள். நம்பெருமாள் திருவரங்கத்தில் திருத்தேரில் வீதியில் எழுந்தருளுகையில் தேர்ச்சீலையில் கைத்தீவர்த்தியின் தீபற்றி எரிந்ததை அவித்தேனென்று ஐயங்கார் மறுமொழிபகர்ந்தார். இதைக்கேட்டோர் ஐயங்கார் சித்தப்பிரமை கொண்டனரேனறனர். நாயகர் உடனே இதனுண்மையை ஒற்றரையனுப்பி ஸ்ரீரங்கத்தில் விசாரித்தபோது, ஐயங்கார் கூறியது நிஜமென்று தெரியவந்தது. ஐயங்கார் அரங்கநகரில் அதேகாலத்தில் தேர்ச்சீலையையவித்ததைப் பலருங்கண்டதுண்டென்றும் வெளியாகியது.

அவ்வற்புதத்தைக் கேட்டவுடனே நாயகர் ஆநந்தபரவசராய் ஐயங்காரை அழைப்பித்து அவரைவலம்வந்து தண்டனிட்டு நின்று, நீர் ஓர்மகான் உம்மிடம் எளியேன் வேலைவாங்கியதை மன்னித்தருளும். இனித்திருவரங்க நகரிலேயே போய் அரங்கனை வாழ்த்திக்கொண்டு தலவாசம் செய்தல் வேண்டும். அங்கே தங்களுக்கு வேண்டிய உபசாரணைக்கும் தங்குமிடத்திற்கும் தக்கவிதம் அமைத்துள்ளே னென்று கூறி நரவாகனத்திலேற்றி அரங்கநகரேற வாத்திய கோஷத்துடனனுப்பிவிட்டார். பிறகுதாமே அரங்கத்திற்கேகி வேண்டிய அனுமதிக ளெல்லாஞ் சமைந்திருத்தலை நேரிற்கண்டு

களித்து ஐயங்காரிடத் தனுமதிபெற்று மதுரைக்கேகினர். இதன் பிறகுதான் ஐயங்கார் பல பிரபந்தங்கள் பாடித்திவ்ய கவியெனப் பலருங்கொண்டாடும் நிலைபெற்றனர்.

இப்பிள்ளையார் தொண்டு கிழமாம்வரை ஜீவித்திருந்தமையால் இவர் வயதை ஒருத்தேசம் எழுபதாண்டெனக் கொள்ளலாம். ஆயுளின் பின்பாதியை யெல்லாம் இவர் திருவரங்கத்தல வாஸத்திலே கழித்தவர். இவர்காலத்து ஆனைக்காவிலும் சிதம்பரத்திலு மிருந்த சைவாபிமானிகள் இவர் அமுதவாக்கைக் கண்டு பொறாமைகொண்டு அடிக்கடி யிவரைச் சிற்சில கவிதைவாயிலாக அவமதித்து வரம்புகடந்து சென்றமையால் இவர் பரப்பிர்மவிவேகம் பாடினார். இவ்வீரவைணர் காலம் இன்னும் எத்துணைநாள் நீடிக்கும் என்று அவர்கள் பெருங்கவலை கொண்டிருந்தனர். ஒருநாள் "அழிபிரமர்வாழ் நகரரங்கமல்லதில்லையே" எனும் வாக்கியமெழுதப்பெற்ற ஓலைச்சீட்டை ஒருவர் சிதம்பரத்திலிருந்து அரங்கத்தில் ஐயங்காரிடம்காட்டிவரும்படி ஒரு ஆள்வசம் அனுப்பினர். ஐயங்கார் அச்சீட்டை வாங்கிப்பார்த்துவிட்டு அரங்கமல்ல என்றதன் பின் ஒருகுத்து எழுத்தாணியாற் போட்டு அதைத் திருப்பிக்கொடுத்து அனுப்பியவரிடம் கொடுக்கும்படி சொல்லி யனுப்பிவிட்டார். இவர் 80 வயதளவும் ஜீவித்திருந்தாரென்பது கர்ணபரம்பரை.

இவர் அரங்கராலயத்துள் ஓர்நாள் வைகுண்டநாதன் சந்நிதிமுன்பே ஸேவைசெய்து கொண்டிருக்கையில் ஓர் கிழப்பசுவந்து முட்டியது. இவர் நின்றுகொண்டு வெளியே நின்று கைகூப்புகையில் இது நிகழ்ந்தது. உடனே பின்வரும்வெண்பாவைப் பாடிக்கொண்டே அரங்கனடியிற் சார்ந்தனர்

வெண்பா.

துளவ துளவவெனச் சொல்லுஞ்சொற் போச்சே
அளவில் நெடுமூச்சு மாச்சே - முளரிக்
கரங்கால் குளிர்ந்ததே கண்ணும்பஞ் சாச்சே
இரங்கா யரங்கா வினி.

அரங்கனையே நித்தநித்தம் நினைந்து பத்திமிகுந்து நின்றபடியே அரங்கனை யுச்சரித்துக்கொண்டே நற்பதம் பெற்றமை வியப்பே.

இவர் யாதொரு நோயுமின்றி இவ்வாறு ஆலயத்துள் நிற்கையில் தாமேமுன் தமது சீடர்களுக் கறிவித்திருந்தபடியே திருநாட்டிற் கெழுந்தருளினர். இம்மாகானின் பத்திநிலை எத்திறத்தும் யாராலும் ஏத்தற்குரித்தே. இவர் வீரவைணவராலும் வலுவிற் சமயவாதம் செய்யப்போவதில்லை. தம்மிடம் வந்து விஷ்ணுதூஷணஞ் செய்யப்புகின் அவரை எளிதில்விடாது திருமாலின் சிறப்பைக் கூறுதலே இவர் தன்மை.

திருவானைக் காவிலுள்ளார் ஐயங்கார்வாயாற் சிவபிரானைப்பாடுவிக்க வேண்டுமென்று யோசனை செய்துகொண்டு ஓர் நாள் அரங்கராலயத்து விசுவரூபப் பசுவொன்று தங்கள் கொல்லையில்வந்து மேய்ந்ததென்று ஆனைக்காவிலேயே கட்டிவைத்தனர். ஐயங்காரிவரில்விடுப்போமென்றனர். ஐயங்காரவர் களைப்பசுவுடனழைத்துவரில் அவர்கள் வேண்டுகோளுக்கிணங்குவேனென்று அரிவித்தனர். அவர்களும் இது வேதருணமென்று அதிகாலையிற்பசுவுடன் ஜயவிஜயர்கள் நிற்கும் மண்டபத்தருகில் வந்தனர். ஐயங்கார் பசுவை கோயிற்றினமானக்கோலம் காணவிட்டுவிடவேண்டு மென்று சைவர்களை வேண்டிக்கொண்டனர். தங்கள் வாயால் எமது சிவபிரான் மீது ஒருபாடல் பாடினால் கபிலையைவிட்டு விடுகிறோமென்றனர். பிராதக்காலத்தில் அரங்கர்தரிசனம் தடையாகின்றது. விட்டு விடுவீராகில் உடனேயாம் பாடுகின்றோமென்றனர். இஃதுண்மையாகில் பாட்டினிலொன்றொரு சீரையேனுங் கூறுதலாகாதோ என்று சைவர்கள் கூறினர். உடனே ஐயங்கார் "மங்கைபாகன்" என்று தம்வாயா லிரண்டுசீரை யருளிச் செய்தனர். இதனைச் சைவர்கள் காதாரக்கேட்டுக் களித்துப்

த்துப் பசுவைவிடுத்தனர். எல்லோரும் விசுவரூபதரிசனம் செய்தார்கள். பிறகு ஐயங்காா்தாம் அடியெடுத்த பாடலைப் பின்வருமாறு பாடினார்.

14–சிராசிரியம்.

மங்கை பாகன் சடையில் வைத்த கங்கை யார்ப தத்துநீர்
வனச மேவு முனிவ னுக்கு மைந்த னான தில்லையோ
செங்கை யாலி ரந்தவன்க பால மார சுற்றினோர்
செய்ய தாளின் மலர ரன்சி ரத்தி லான தில்லையோ
வெங்கண் வேழ மூல மென்ன வந்த துங்கள் தேவனோ
வீறு வாண னமரி லன்று விறல ழிந்த தில்லையோ
அங்கண் ஞால முண்ட போது வெள்ளி வெற்ப கன்றதோ
ஆதலா லரங்க னன்றி வேறுதெய்வ மில்லையே.

இப்பாடலைக்கேட்கப் பொறாராகிச் சைவர்கள் ஐயங்காரின் தந்திரத்தைப்போர உகந்து ஆனைக்காவிற் கேகினர். இவ்வகையா யிவர்பாடியுள்ள மற்றோர்கவியை எடுத்துக்காட்டிவிட்டு இவர் சரித்திர ஸாரத்தைப் பூர்த்திசெய்வோம். அக்கவிவருமாறு.

கட்டளைக் கலித்துறை.

மத்தக் கரியைக் கராப்பற்றி நின்றதோர் வாவியுள்ளே
சித்தந் தெளிந்து முறையிடும் போது செழுந்துளவக்
கொத்துக் கிளர்முடிக் கோவிந்த வென்றது கூப்பிட்டதோ
செத்துக் கிடந்தன வோகெடு வீருங்கள் தெய்வங்களே.

இப்பிள்ளையார் வீரவைணவ ராதலின் இவர் சரித்திரத்தின் ஆதியில் வீரவைணவரெனக்காட்டி முடிவுரைக்குமிடத்தும் வீரவைணவப் பாடல்களைக்காட்டி இச்சரித்திரத்தை முற்றுவித்தோம்,



# வரதுங்கபாண்டியர்.



பாண்டியர் பரம்பரையில் ஐந்நூறு வருடங்களுக்கு முன்னே வரதுங்கபாண்டியன் எனச் சகோதரர் இருவர் பிறந்தனர். இவர்களில் மூத்தவனான வரதுங்கபாண்டியன் மனைவியுடனே தவமேற்கொண்டு சிவனடியார்களுக்குத்தொண்டு செய்வதும் திருக்கருவைநல்லூரில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானுக்கு வழிபாடு செய்வதுமாகத் திருக்கருவை நல்லூரில் வசித்துக் காலங் கழித்து வந்தான். இளையவனான அதிவீர ராமபாண்டியன் பகையரசரை வெற்றிகொண்டு காமலோலனாய்த் தென்காசியில் காலங்கழித்திருந்தான். இவ்விருவரும் சரஸ்வதி கடாட்சத்தால் அவரவர் திறத்தின்படித் தமிழிற் பலபாடல்கள் பாடிக்கொண்டிருந்தனர்.

வரதுங்கபாண்டியன் சைவபுராணங்களில் சாரமான பிரமோத்தரகாண்டம் என்னும்அரியநூலைமொழிபெயர்த்தும் திருக்கருவை நல்லூரில் வீற்றிருக்கும் சிவபெருமானுக்கும் பாமாலையாகத் திருக்கருவை வெண்பா வந்தாதி திருக்கருவைக்கலித்துறையந்தாதி என்னும்பிரபந்தங்களையும்பாடியும் சிவநேசச் செல்வராய்ச் சிறப்புற்றிருந்தனன். அதிவீரராம பாண்டியன் நளசரிதத்தைத்தமிழிற்பாடிக்கொண்டிருந்தவன், பாடிமுடிப்பதற்கு முன்னே அதனைவரதுங்கபாண்டியனிடங் கொண்டுபோய்க் காட்டினன். அதைக்கண்டவரதுங்கன் இதென்ன புண்ணியமா? புருஷார்த்தமா? அரனைத்துதியாமல் நம்மைப்போன்ற அரசனொருவன் கதையைப் பாடிக் காலங்கழிப்பது வீண்காரியமே என்றனன். அவ்வார்த்தையைக் கேட்டுச் சலிப்படைந்து அந்தக் காவியத்தை ஒருவாறுமுடித்து விட்டான். அதனால் அது பின்பாகம் இரசம் இளைப்பதாயிற்று.

அங்ஙனம் முடிந்த பிறகும் அவ்வளவோடு அமையாது அதைக் கொண்டுபோய்த் தமையன் மனைவியிடங் கொடுத்துப் பார்வையிடும் படி வேண்டினன். கூர்மபுராணத்தைத் தமிழ்செய்த அவ்வரசி புன் சிரிப்புடனே திருப்பிக் கொடுத்தாள். அவளுடைய அபிப்பிராயத்தைக் கேட்ட போது "வேட்டை நாய் வேட்டைமேல் செல்லும்போது வேகமாய்ச் செல்லும்: திரும்பி வரும்போது ஏங்கி யிளைத்துவருமன்றோ. அதுபோலும் உமது காவியம்" என்றனள். செவியிலே நாராசம் புகுந்ததுபோலே அந்தவார்த்தையைக்கேட்டவளவில் அதிவீரராமபாண்டியன் கோபாவேசத்துடன் தன்னகரடைந்து "அன்றே காவியம் நன்கு முடிகிறதைக் கெடுத்தாள்: அவன் பெண்டாட்டி இங்ஙனம் கொடுஞ்சொல் சொன்னாள்." என்று நினைந்து நினைந்து வீராவேசங்கொண்டு நால்வகைப்படைகளைக் கூட்டிக் கொண்டு படையெடுத்துப் புறப்பட்டுப்போனன். அப்போது வரதுங்கபாண்டியன் அச்செய்தியைக் கொண்டுவந்த தூதனிடம் "நீ மார்த்தாண்டன் மைந்தனையும் விபீஷணனையும் பஞ்சவரிற் பார்த்தனையும் எண்ணாமல் பரதராகவருடைய அன்பை எண்ணுவாயாக" என்ற கருத்தமைந்த ஒரு வெண்பாவை எழுதியனுப்பினன். அதைக்கண்ட அதிவீரராம பாண்டியன் அண்ணனைச் சென்று வணங்கி உச்சீவிக்கும் உபாயம் வேண்டினன். வரதுங்க பாண்டியன் ஹிதோப தேசம்பண்ணி "வடமொழியிலுள்ள காசிகண்டத்தைத் தமிழில் மொழிபெயர்த்திடுக. உன் குற்ற மெல்லாம் அதனால் ஒழியும்" என்றனன். பின் அதிவீர ராமபாண்டியின் அண்ணியாரடியில் நமஸ்கரித்துக் கண்ணீருகுத்துத் தான் செய்த பிழையைப் பொறுத் தருளவேண்டினன். அப்பால் தமையனுடைய நியமனத்தின்படி காசி கண்டத்தை மொழிபெயர்த்து நறுந்தொகை என்னும் நீதி நூலும் இயற்றிப் பொன்றுப்

புகழ்பெற்றனன். வரதுங்க பாண்டியன் அப்பால் திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி பாடிச் சிலகாலங்கழித்துச் சிவசாயுச்சியம் பெற்றனன்.

அதிவீரராம பாண்டியன் அப்பால் முப்பது பாடலடங்கிய அம்பிகைமாலை என்னும் சிறுநூலும் இலிங்கபுராண மொழி பெயர்ப்பும் இன்னுஞ் சிலநூல்களும் இயற்றினன்.

---

## பிரமோத்தரகாண்டம்.

(பரமசிவனையே வழிபடவேண்டுமென்பது.

1. கண்ணுத லாலய நோக்குங் கண்களே கண்கள்
கறைக் கண்டன் கோயில்புகுங் கால்களேகால்கள்
பெண்ணொருபாகனைப் பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளேகைகள்
பண்ணவன்றன் சீர்பாடு நன்னாவேநன்னா
பரன்சரிதையே கேட்கப்படுஞ் செவியேசெவிகள்
அண்ணல்பொலங் கழனினைக்கு நெஞ்சமேநெஞ்சம்
அவனடிக்கீ ழடிமைபுகு மடிமையேயடிமை.

### இராசநீதி.

தேவர்நிலை கடவார்மேலோர் திறம்பிழையார்
நாவினிரண் டுரையார்நன்கல் லவைபுரியார்
காவன்முறைதிறம்பார் காமச்செயல்பெருக்கார்
பூவலயங்காவல் புரியும்புரவலரே.

# முத்தமிழாராய்ச்சி.



"ஐயர் வருகிறவரையில் அமாவாசை நிற்குமா" என்னும் பழமொழிக்கு இணங்கச் சில எண்குறிப்பு மொழிகளுள் சாஸ்திர ஸங்கேத பதங்களாகிய முத்தமிழ், முக்குணம், முப்பழம், முத்தொழில், முப்பொறி, மும்மண்டலம் முதலான சொற்கள் சிலஇருந்தாலும் இவைகளைப்பற்றிக்கலாவல்லபர் ஒருவரும் எழுதுபவர் காணப்பெற்றிலோம். பிற்காலத்தில் எவரேனும் எழுதத்தொடங்கக்கூடும். தற்காலத்தில் முத்தமிழைப் பற்றிச் சிலவிஷயங்களைப் பிரசுரம் செய்யப்பிரமேயம் நேர்ந்தமையால் ஒருவருக்கும் காத்திருக்காமல் இப்பொழுது சிலர் விரும்பியதிற்கு ஏற்றதாக இந்த விஷயத்தைப் பற்றிச் சற்று நாம் ஆராய்ச்சி செய்யத் துணிந்தோம்.

மூவகைத் தமிழ் என்னும் விஸ்தாரமான தமிழ் இலக்கணங்களைப் பெற்ற பாஷையில் எதைப்பற்றி எழுதுவதென்று யோசனை உண்டாயிற்று. முத்தமிழையும் பற்றி எழுதலாமென்றால் ஏடும் இடங்கொடாதே, பொழுதும் போதாதே என்னுங்கவலை அதிகரிக்க, இந்தக்கவலை நீங்கச் செந்தமிழ் நாட்டுக்கு முன்பு நாம் யாத்திரையாகச் சென்றது இப்பொழுது ஞாபகத்திற்கு வந்தது.

சந்தனப் பொதிகைச் செந்தமிழ் முனியும்
சௌந்தர பாண்டியன் எனுந்தமிழ் நாடனும்
சங்கப் புலவருந் தழைத்தினிதிருக்கும்
மங்கலப்பாண்டி வளநாடென்ப.

என்று வர்ணிக்கப்பட்ட மதுரை, சிவகங்கை, ராமநாதபுரம் ராமேச்வரம், தனுஷ்கோடி, திருப்புல்லாணி முதலிய பாண்டிநாட்டின்கண் உள்ளனவாகிய பல இடங்களுக்குப்போயிருந்த ஒருமாதகாலத்தில் தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவியோடுங் கூடிய நர்த்

தனங்களைக்கண்டும் கேட்டுமிருந்ததை யோசித்ததில் கண்ண பிரானுக்குக் கானலோலரென்றும் சிவபிரானுக்கு சங்கீதப் பிரியரென்றும் பெயரமைந்தது சரியென்றும் மனிதர்கள் இயற்றமிழைப் பார்க்கிலும் இசைத்தமிழைப் பாராட்டுவது முறையென்றும் தோற்றியது. முடிவில் முத்தமிழி லொன்றாகிப நாடகத்தமிழைப்பற்றி மாத்திரம் சற்றே ஆராய்ச்சி செய்வதும் அதன் நுட்பங்களைத் தெரிந்துகொள்வதும் இக்காலத்துக்கு உபயோகமானவையென்றும் நிச்சயித்துக் கொண்டோம். இந்த விஷயத்தைபற்றி எமக்குத் தோன்றியதை எழுதலாயினோம். முத்தமிழின் வேறுபாடுகளை முதன் முதலில் சிறிதுவிவரிப்பது அவசியமல்லவா?

இசைத்தமிழில் ராகதாளமுதலிய ஸங்கீதவகைகளெல்லாமடங்கும். இப்பூவுலகில் சகல ஜீவவருக்கங்களுக்கும் இனறியமையாப் பொதுவிலக்கணங்களாக நிற்பன, உண்ணுதல் உறங்குதல் முதலியனவாம். பொதுவாகப் பிராணிகள் காலம்போக்கும் முறைமையை யோசிக்கும்வேளையில் " பசிதீரவுண்பதும் உறங்குவதுமாக முடியும், " என்று தாயுமானவர் பாடியது உண்மையே. ஆயினும் உணவீட்டலிலும் உறங்குதலிலும் பயனற்றசிற்றின்பங்களிலும் செலவிட்டும், உயர்ந்த சிலஜீவராசிகளுடைய ஜாக்ராவஸ்தையிற் பின்னும் சிலநேரம் மிஞ்சுவதுமுண்டு. அங்ஙனம் மிகுதிப்படும் சிறுபொழுதைச் செலவிடுங் கிரமத்திற்கே'பொழுதுபோக்கு' எனப்பெயர் வழங்கப்படுகின்றது. பொதுவாக ஜீவகாலங்களுடைய பொழுதுபோக்கின் இலக்கணம் ஆராயுங்கால், உணவுசம்பாதித்தல், ஆகிய இப்பெருங்காரிய சித்திக்காக அவை எந்தெந்தத் தொழில்களை வாஸ்தவத்திற் செய்கின்றனவோ அந்தந்தத் தொழில்களையே பாவனையிற்செய்து மகிழுந்தன்மையே யாமென்பது நாய் பூனை இவற்றின் விளையாட்டையேனும் கவனித்துப் பார்த்திருக்கின்றவர்களுக்கு நன்கு விளங்கும். உயிர்த்தொகுதியில் மேம்பட்ட மனிதர்

களுடைய பொழுதுபோக்கும் இவ்விலக்கணத்திற்குப் புறம்பானதன்று. இவ்விலக்கணம்சித்விலாஸாதிக்யத்தால் சாகோப சாகையாகப் பிரிந்து நாகரீகச் சீர்த்திருத்தங்களாகிய இலைதழைபூவினங்களால் மூடப்பட்டிருப்பதால், அது ஒருவாறு மானிடப்பொழுது போக்கில் மறைந்து நிற்குமேயன்றி மாறுபடமாட்டாது. ஆதலால், காரியார்த்தமாக நடந்தேறும் தொழில்களைப் பாவனையினால் நடித்துக் காட்டலுக்கு நாடகமெனப் பொதுப்பெயர் கூறுவோமாயின், மனிதருட்பட்ட சகலஜீவராசிகளில் பொழுது போக்குகள்யாவுமே நாடகமென்னும் முதல்வடிவமுடையன வென்று நிச்சயித்தல் அநுசிதமாகாது.

இதே விஷயத்தைப்பற்றி ஆங்கிலேயப் பிரபந்தங்கள் எழுதும் முறைக்கு வழிகாட்டிய அட்டிஸன் என்னும் உத்தம கிரந்தகர்த்தா கூறியதாவது:— உயிர்த் தொகுதியில் உயர்ந்தபிறப்பினரான மனிதர்கள் பொழுதுபோக்கும் காலத்தை எண்ணிப்பார்த்தால், மனிதருடைய வாழ்நாளை 20-பங்காகப் பிரித்துப் பார்க்கையில் 19 பங்கு கிரியையும் பிரயுமில்லாத வெறுங்காலம் அல்லது சூந்யமாயிருப்பதாகக் காண்போம். இந்தவெறும் பொழுதைப் போக்கப் பற்பலவகைகளில் நயமான சொன்னடை பொருள்நடை பொருந்திய உபயோகமான நூல்கள் வாசிப்பதே மேலானவகையென்று வற்புறுத்திச் சொல்லுகிறார். செழித்த வயல்களிலும் மநோகரமான நந்தன வனங்களிலும் பார்ப்பவர் கண்ணுக்கு அங்கங்கே அலங்காரமான புஷ்பமும் பச்சென்றிருக்கும் இலைகளும் காணப்பட்டு மகிழ்ச்சிதருவது போலக் கல்விப்பயிற்சி விஷயஞானம் ஆத்மஞானம் இவற்றை நாடி நூல்களை வாசிப்பவர்கள் தமது ஆயுள் பிரமாணத்தையுங் கடந்து சுகமாக ஜீவிக்கக் கூடும். இங்ஙனம் பொழுது போக்குதற்கு மற்றொரு வகையுமுண்டு; அதாவது கல்வி கேள்விகளால் தேர்ச்சி யடைந்த சதுரர்களுடன் சம்பாஷித்தலேயாகும். அதனால் உண்டாகும் சுகானுபவத்துக்கு இணையேயில்லை.

நமது தமிழ்நாட்டிலும் இம்முறையே இம்மூன்று நற்கலைகளும் தொன்று தொட்டு ஏற்பட்டு வந்தமைபற்றியே தமிழை இயல் இசை நாடகம் என்னும் மூன்றுவகையாக முன்னோர் வகுத்தனர். முத் தமிழின் இலக்கணங்களும் ஆதிகாலத்தில் அகத்தியமென்னும் நூலில் விரிவாகக் கூறப்பட்டிருந்தன; அப்பால் அகத்திய முனிவருடைய மாணக்கர்களுள், தொல்காப்பியர் முதலானோர் இயற்றமிழை வேறுபிரித்து வழிப்படுத்தினர்.

யாவரும் பார்த்துக்களிக்கப் பரதமென்னும் பாவராக தாளத்தோடு வழங்கிவரும் நாடகத்தை அரங்கில் நடத்தலும் ஒருவாறு பொழுது போக்குதற்குப் பிரயோஜன முள்ளதென்று அட்டிஸனென்னும் சிறந்த ஆங்கிலேய பண்டிதர் அறிவித்திருக்கிறார். இந்த ஐரோப்பியபண்டிதர் கருத்து எப்படியிருந்தாலும் இருக்கட்டும். நமது நாட்டுப் புலவர் கருத்தென்னவென்று சற்றுவிசாரிப்போம்.

“நாடக மெனப்பொதுப்பெயர்கூறத்தகுந்த பொழுது போக்கிலிருந்துதான் பலவேறு ரூபமான எல்லா நற்கலை (Fine arts) களும் பிறப்பன வாயினும், பாட்டும் பண்ணும் ஆட்டமும் ஆகிய மூன்றும் அதனினின்றும் நேரேயுற்பவிக்கின்றன. கால விளம்பனத்தாலும் நாகரீகத் தேர்ச்சியாலும் பாவனையில் நடத்திக் காட்டும் தொழில்களை நன்கு விளக்கத்தக்க வசனங்களைக் காதுக்கினிமை பெறக் கோத்து மொழிதலும், கண்ணுக்கு இனிமைபெறக் கரசரணுதியவயவங்களாலும் முகக்குறிகளாலும் அபிநயித்துக் காட்டலும், வழக்கத்தில் வரவே, பாட்டும் அதனுடன் புணர்ந்த பண்ணும் அவையிரண்டுடன் கலந்த ஆட்டமும் தனித்தனி பிறப்பதாயின. பாட்டின் சீர் இசை தளை அடி முதலிய வற்றையும் அப்பாட்டால் விளங்கும் நவரசங்களையும் மாத்திரம் கவனித்து அபிவிருத்தி பண்ணினால், அது வித்வத்ஜன பூஜிதமான காவ்யம் என்னும் சிறப்புப் பெயர்பெற்று நிற்கும். அப்படி

யே பண்ணைமாத்திரம் விசேடமாகக்கவனித்துச் சொற்கோத்தல் சங்கீத மெனத் தனித்து வளரும். ஆட்டமும் அவ்வாறே சிலதேசங்களிலும் சில ஜாதியாருள்ளும் தனிப்படத்தழைத்துளதேனும் முன்னவை யிரண்டுடன் கலந்துவழங்கலே பெரும்பான்மை. அங்ஙனம் கலந்து வழங்கும்போது நாடகம் என ஓர் சிறப்புப் பெயர் கூறுதல் வழக்கம்.

இயற்றமிழாவது தமிழநாட்டாரின் வழக்க நடையும் செய்யுள் நடையுமென்று கூறலாம். பெருநாரை, பெருங்குருகு முதலிய நூலுடையார் இசைத்தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தினர்.

இசைத்தமிழில் ராகதாள முதலிய சங்கீதவகைகளெல்லாமடங்கும். நாடகத்தமிழாவது. பாவராகதாள மூன்றுமுடையதென்றும் மேற்கூறிய இயற்றமிழ் இசைத்தமிழின் வழிப்பட்டதென்றும் யாவருக்கும் கூறுமலே விளங்கும். முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றிய முதலிய நூலுடையார் நாடகத்தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தினர்.

இம்மூன்றும் நாளேற நாளேற வேறுவேறு உருக்கொண்டு மாறுபாடடைந்துள வென்பது யாவருக்கும் தெரிந்த விஷயம். காவ்யம் அடைந்திருக்கும் ஒரு சிறுவிகற்பம் பத்துப்பாட்டை யாவது கலித்தொகையை யாவது இப்போது வழங்கும் கம்பர் இராமாயணத் தோடும் பிரபுலிங்கலீலை யோடும் ஒப்பிடுங்கால் விளங்காதிராது. அவ்வாறே இப்போது போக்கியமாக வழங்கும் தேவாரப் பண்ணோடுதோடிபைரவி யென்னும் இராகங்களில் ஆக்கப்பட்டுள்ள முத்துத் தாண்டவர் கீர்த்தனை, இராமாயணகீர்த்தனை, உத்தரராமாயண கீர்த்தனை, கந்தபுராணகீர்த்தனைகளை ஒப்பிடுங்கால், இசைத்தமிழ் அடைந்திருக்கும் வேற்றுமை தெரியலாகும். முன்னோர் கேட்டு மகிழ்ந்த இசைகளும் அவற்றைத் துத்தி முதலிய வாத்தங்களில் காட்டிய இசைக்கருவிகளும் பெரும்பான்மையும்

மாய்ந்துபோயினவென்றேசொல்லலாம். "இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்" என்ற ஒருதிருவாசகத்தாலேயே இக்காலத்து வழங்கும் வீணையன்று, சிலப்பதிகாரம்முதலிய பழைய நூல்களில் மெதுமனத்துக்கு எளிதில் வாராவண்ணம் வர்ணிக்கப்பட்டிருக்கும் யாழென்பது வெளிப்படையாகும். யாழ்திராவிடர்க்குரியதும், வீணை வடதிசை ஆரியர் தென்திசைக்குக் கொணர்ந்த துய்யதோர் இசைக்கோர் கருவியும் ஆம். இங்ஙனம் தமிழ் இசைகளுக்கு இசைக்கருவிகளும் மாண்டுபோன வண்ணமே தமிழ் நாடகமும் பலவாறு வேற்றுமைப்பட்டு அதின் ஆதிவடிவம் இன்னதென்று ஊகித்தல் அருமையாம்படி இறந்து போயினதாகக் காணப்படுகின்றது.

இம்மூவகை இலக்கணங்களுக்கும் இலக்கியங்கள் பண்டைக்காலத்தில் நிரம்ப இயற்றப்பெற்று வழங்கிவந்தன. இவை, சிலப்பதிகாரம் அரும்பதவுரை, அடியார்க்கு நல்லாருரை முதலியவற்றால் யாருக்கும் நன்கு விளங்கும். இது நிற்க நாடகத் தமிழாவது பாவராகதாள மூன்று முடையதென்றும் மேற்கூறிய இயற்றமிழ் இசைத்தமிழின் வழிப்பட்டதேயென்றும் யாவருக்கும் கூறாமலே விளங்கும்.

இப்போது தமிழில் வழங்கிவரும் நாடகங்கள் யாவும் அருணாசலகவிராயர் கீர்த்தனரூபமாக இயற்றிய இராமநாடகத்தைப் பின்தொடர்ந்தவையாயிருப்பதினாலும், கீர்த்தனைச் சாயை பழையநூல்களிற் காணாமையாலும், பூர்வீகநாடகமென்று நிச்சயிக்கத்தக்கது யாதொன்றும் இதுவரையில் வெளிப்படாமையாலும், தமிழ்மொழிக்கே யுரித்தான யாதேனும் ஒருநாடகம் இருந்ததுதானுண்டோ என்று சிலர் ஐயுறல் இயல்பேயாம். ஆனால் அதைப்போலவே சந்தேகிப்பதற்கு முதற்காரணம் நாடகம் என்பது வடமொழியிலும் ஆங்கிலேயத்திலும் நாம் கண்டு பழகும் நாடகத்திற்கே பெயராயிருத்தல் வேண்டுமென்னும் மயக்கமேயாமெனத்தோற்றுகின்றது.

ஆங்கிலேய ரீதியாக இக்காலத்து நடந்தேறும் நாடகங்கள், நாடகக்கதையை 'நடிப்பவர்களின் வாய்மொழியால் மாத்திரம் விரிப்பதும் அவர்கள் ஒருவித நர்த்தனமுமின்றித் தங்களுக்கு வகுத்த சம்பாஷணைகளை அவைகளுக்கேற்ற அபிநயத்தோடு மாத்திரம் மொழிதலும் ஆகிய இரண்டு இலக்கணங்களை யுடையனவாக இருக்கின்றன. இவ்விலக்கணங்களோடு பொருந்தினவற்றிற்கே நாடகம் எனப்பெயராயின. அவ்வித நாடகம் தமிழ்நாட்டில் முன்னிருந்திருப்பதுண்டோ என்று சந்தேகித்தல் அயுக்தமன்று. ஆனால் ஆங்கிலேய நாடககாவ்யம்பிறந்து இதுபரியந்தம் வளர்ந்தோங்கிய விருத்தாந்தம் அறிந்தவர்கள் இவ்விரண்டு இலக்கணமும் அந்நாட்டு நாடகத்திற்கே எந்நாளும் பொருந்தியிருந்தனவாக மதியார். நாடகம் என்னும் வடமொழிக்குச் சரியான தென்மொழி கூத்து என்பதே. திவாகரப்படி கூத்தின் மறுபெயர்கள் "நடமே நாடகங் கண்ணுணட்டம், படிகமாடல், தாண்டவம்பரதம், ஆலுதல்தூங்கல், வாணி குரவை, யிலவ நிலய நிருத்தமு மாமே" என்று 15 மறுபெயர்களாம். ஆதலால் தமிழர், கூத்து நாடகம் என்று சிறப்பித்துக்கொண்டவையனைத்தும் ஆடலோடமைந்தவையாக இருந்திருக்கவேண்டு மென்று கொள்ளுதல் தவறாகாது. மேளதாளங்களுக் கிசையுமாறு யாதேனும் ஒருபாவினத்தில் கதைபமைத்து அந்தக்கதையை ஆடலோடோதி அபிநயித்தலே ஆதிகாலத்துத்தமிழ் நாடக ரீதியென்று பலகாரணங்களாலும் எண்ணுதற்கிடமுண்டு. அவ்வித ஆடல் விகற்பங்கள் எண்ணிறந்தனவா யிருந்தன வென்பதற்குப்பழைய காவியங்களுள்காணும், மாயோனாடல், சிவனாடல், குமரனாடல், இந்திராணிபாடல், துர்க்கையாடல், சத்தமாதராடல், காமனாடல், வேலனாடல், வெறியாடல், பிசாசுக்கைக்கூத்து, குரவைக்கூத்து என்பன ஆதியான மொழிகளே சாக்ஷியாக நிற்கும். "மலடிமைந்தனு

க்கு மாலைசூடல்" போல இல்லாத நாடகத்திற்கு இத்தனை பெயர் வகித்தல் இயல்பன்று. மேலும் மேற்கூறிய கூத்துவகைகள் பற்பலகாரணச் சேர்க்கையால் தமிழ்நாட்டில் மாய்ந்துபோயிருப்பினும், அழிந்தவைகட்கெல்லாம் அபயப்பிரதானம் கொடுத்து ஆதரிக்கும் எல்லைபோல் விளங்குகிற மலையாளத்துள் பலகிராமாந்தரங்களில் இன்றும் நடைபெறும் ஐவர்களி, பரிசைக்களி, ஓட்டந்துள்ளல் முதலான பலவேறு ஆடற்கதைகளைக் காண்பவர்க்குத் தமிழ்நாடு முழுவதும் பூர்வத்தில் வழங்கிவந்த நாடகவிகற்பங்கள் இத்தன்மையவென்று ஊகித்தல் ஒருவாறு கூடியதாகவே யிருக்கின்றது. ஆட்டக்கதை என்பதே மலையாளத்திற் பிற்கால நாடகங்களின் பெயராகவுமிருக்கின்றது. குறத்திப் பாட்டு, உழத்திப்பாட்டு முதலிய பழையபிரபந்தரீதியாய்ப்பாடி பாடும் பாவிகற்பங்கள் இன்னும் அநந்தம். தமிழ்நாட்டிலும் வில்லடிப் பாட்டு, உடுக்கைப்பாட்டு முதலியன ஆட்டத்தோடு கதையை விரித்தலுக்கே யுரித்தானவை. நொண்டிச்சிந்து முதலிய பாவிகற்பங்களும் பற்பல தாழிசைகளும் ஆடலுக்கு மிகவும் ஏற்றன. ஆதலால் பழையதமிழ் நாடகங்கள் வில்லுப்பாட்டு, துள்ளற்பாட்டு முதலியவைபோல ஒருவர் தனியாயேனும், கும்மிப்பாட்டு, பரிசைக்களி முதலியவைபோலப்பலர்கூடியேனும் ஒருகதையைத் தாளமேளங்களுடன் ஆடி அபிநயித்துக்கூறும் ஒருவகைப்பாட்டாக இருந்திருக்க வேண்டுமென்று நிர்ணயிக்கலாம்.

அப்படியானல் தமிழ் நாடகங்கள் யாதொன்றும் இப்போது காணக்கிடையாமைக்கு விசேடகாரணம் தேடவேண்டிய அவசியமில்லை. படித்தறிவதே பயனாகக்கொண்ட பழைய இயற்றமிழ்க் காவியங்களுக்குள் இக்காலம் நம் கைக்கெட்டினவை எத்தனை, இருந்தவிடமே தெரியாது இறந்துபோனவை எத்தனை எனக்கணக்கிடுவோமாகில், இப்போது

ஜீவித்திருக்கிற மனிதர்களையும் இறந்தோரையும் "எண்ணிக்கொண்டற்று" எனவன்றோ மதிக்கத்தக்கதாக நிற்கின்றது. படித்தமாத்திரத்தில் நவரசானுபவம்தரத்தக்க இயற்றமிழினது கதியே இங்ஙனமாயின் ஆடிக்கண்டாலொழிய இன்பம் பயவாதனவான நாடகப்பாட்டுகள் பலகாலவிளம்பத்தில் மாய்ந்துபோயினது ஒரு அதிசயமா? மதாபிமானத்தால் ஆழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியும் மூவர்தேவாரங்களும் ஒருவாறு அவற்றின்பண்ணும் பிற்காலத்தார் அறியும்படி நிலைநில்லாவிடில், பழைய இசைத்தமிழும் இவ்வாறே உண்டாயிருந்ததோ இல்லையோ என்னும் சந்தேகத்துக்கன்றோ இடந்தருவதாக நிற்கும்? சுத்தவித்தியாவிஷயமான அபிமானம் நீங்கிக் கேவலம் சமயச்சச்சரவுகளால் மூடப்பட்ட இடைக்காலத்தில், இயற்றமிழ்க்காவியத்தலைமை பெற்ற சிந்தாமணி சிலப்பதிகாரம் முதலிய பெருநூல்களே தப்பினது தாலிப்பாக்கியமாக இருக்குமானால், கான காவியங்களாகிய இசைத்தமிழ்நூல்களும் ஆட்டப்பாட்டான நாடகநூல்களும் மண்ணுற மாண்டுபோனமை ஓர் ஆச்சரியமா? இசைத்தமிழும் நாடகத்தமிழும் தம்முள் நெருங்கிய சம்பந்தமுடையவையாக எக்காலமும் இருந்திருக்கவேண்டும் என்பது எளிதில் துணியத்தக்கதே. (ஆரியர்களுடைய ஆதிக்யத்தால் தமிழர்க்குரிய பழைய பண்கள் நாளேற நாளேறப் பயில்வாரற்று மங்கிப்போகவே வடதிசையிராகங்கள் வளர்ந்தோங்கி எங்கும் வழங்கத்தலைப்பட்டன.) பழைய பண்கள் ஓய்ந்தகாலம் இன்னதென்று குறிப்பிடல் அசாத்தியமாயினும் மாணிக்கவாசகர் காலத்திலே அவை மங்கத்துவக்கியிருக்கலாமென்றும், திருவிசைப்பாக் காலமாகிய கிரிஸ்தப்தம் 10-ம் 11-ம் நூற்றுண்டில் தேவதா ஸ்தோத்திரங்களுக்குமாத்திரம் அர்ஹமாக ஒதுங்கியிருக்கவேண்டு மென்றும், பிற்பாடு மடங்களில் புகுந்து மறைந்துபோயின வென்றும் எண்ணுதல் பழுதாகாது. அஃதெப்படியாயினும் ஆகுக: இப்போது நம் நாட்டில் புரவும்

பூபாளம், மாளவி, பங்காளம், காம்போதி, கல்யாணி, காந்தாரி முதலிய இராகங்கள் தம்பெயராலேயே தங்கள் பிறப்பிடம் உணர்த்துகின்றன. இக்காலத்து வழங்கும் மற்ற இராகங்களும் அப்படியே புறநாட்டு வரவென்பது நிரூபித்தல் அரிதன்று. இங்ஙனம் இசைகள் மாறவே புதிய வடதேச இராகங்களில் அமைத்த சிற்சில பதம் கீர்த்தனை இவற்றுடன் கலக்கக்கலக்கப் பழைய ஆட்டப்பாட்டு வடிவாய்த் தமிழ்நாடக நூலும் நடப்பதாயிற்று. துவக்கத்தில் புதியன சிறுபான்மையாயும், பழையசிந்து, கண்ணி, தாழிசை முதலியன மிகுதியாயும் இருந்திருக்கவேண்டும். காலம் செல்லச்செல்லப் பழையன குறைந்தும் புதிய கீர்த்தனங்கள் மிகுந்தும் வந்தன. அருணாசல கவிராயர் இராமநாடகத்திலும் குற்றாலக் குறவஞ்சி முதலிய பழமை பற்றிய நாடக விகற்பங்களிலும், இவை இரண்டுவகைப்பட்ட ஆட்டப்பாட்டுகள் கலந்துகிடப்பன காணலாகும். அருமை பெருமைகளிற் சிறந்த அருணாசலகவிராயர் தமது ஒப்பற்ற நாடகம் அமைத்தபின்னர் அதனையே வாய்ப்பாடாகக்கொண்டு பிற்காலத்தவர் பற்பல நாடகம் செய்தனர்; அவற்றுள்ளும் பழைய சிந்து முதலியவை இராவணப்போரில் விபீஷணன்போல் இன்னும் இறவாமல் ஆங்காங்குத் தலைகாட்டி நிற்றல் புலப்படக்கூடும். இவ்வாறு பழையநாடகப்பாட்டியல்பு முற்றும் மாறுதல் அடைந்துபோயினும் ஒரு விஷயத்தில் பழைய தமிழ்நாடக இயல்பு சற்றும் மாறுபடாது நிலைநின்று கொண்டது. இக்காலத்து நாடகங்கள், எந்த எந்த வடிவமாக இருந்தபோதினும் அவற்றுள் ஒன்றேனும் ஆட்டமின்றி நடந்தேறுதல் கூடியதன்று. இவ்வாட்டமே முன் கூறியபடி தமிழ்க்கூத்திற்கும் பிறனைய நாடகங்களுக்கும் உள்ள தலைமையான வேற்றுமை. பண், பா, அரங்கு முதலியயாவும் வேற்றுமைப்பட்டும், தமிழ்க்கூத்திற்குரிய ஆடல் ஒன்றும் இதுவரைக்கும் பேதப்படவில்லை. ஆங்கிலேய பரிசயத்தால் ட்ராமா என்னும் ஆங்கி

லேயப்பெயரால் சொற்பகாலத்துக்குள் தலையெடுத்துப் பரவி வரும் புது நாடகங்களிலும் யாதேனும் ஒரு சந்தர்ப்பம் வாய்த்தவழி நர்த்தன விஸ்தாரம் நடந்துவருவது இந்நாட்டார்க்கு ஆடலின்றி நாடகம் நடவாதென்னும் உட்கோளை விளக்குவதாக இருக்கின்றது.

ஆங்கிலேய ரீதியாய் ஆடலின்றிக் கேவலம் சம்பாஷணை மாத்திரத்தால் நாடகக்கதையை அரங்கில் நிறைவேற்றுதல் ஜனரஞ்சகமாகப் பொருந்தவேண்டு மேல் இன்னும் சிலகாலம் செல்லுமென்றே நினைத்தல்வேண்டும். இதுவரையில் இசைத்தமிழை ஆதாரமாகக்கொண்டு வழங்கிவந்த நாடகத்தமிழை அதினின்றும் பிரித்து இயற்றமிழோடு சேர்த்தாலொழிய ஆங்கிலேயர் முறையான நாடகமும் அரங்கும் நமக்குள் வாய்ப்பதருமையாம். நமது நாட்டின் இயற்கையறிவோடும், சுபாவ உணர்ச்சியோடும், பக்கச்சார்புகளோடும் பொருத்த முள்ளதாகவே யிருக்கவேண்டும். நமது விவேகவித்துக்கு உபபலமாயிருந்து புதிய நாடகங்கள் அப்பொருத்த முள்ளனவாகச்செய்ய, யார்தான் விரும்பார்கள்? மேற்கோளான நூல்கள் கிடையாமற் போனதனால்தான் இசைத்தமிழை ஆதாரமாகக்கொண்டு இந்த நூற்றாண்டில் அருணாசல கவிராயர், முதலானோர் நாடகம் விலாசம் போன்ற நூல்களைக் கூத்துக்கு உபயோகித்து வழங்கலாயினர். இதுகேட்போர் செவிக்கும், பார்ப்போர் கண்ணுக்கும் இனிமையானது பற்றி இதையே பின் தொடர்வது உசிதமா அல்லது இசைத்தமிழினின்றும் பிரித்து ஆட்டத்தை ஒழித்து நாடகத்தமிழை இயற்றமிழொடு மாத்திரம் சேர்த்து ஆங்கிலேய நாடகரீதியாய்ச் சம்பாஷணை ரூபமாகச் செய்கிறது உசிதமா என்னு மிவ்விரண்டுள் எதைக் கைப்பற்றுவது உசிதம் என்பதுதான் இக்காலத்தார்க்குப் பெரிய விசாரம். ஏனெனில், தொன்று தொட்டுவந்த சுதேசத்தின் பெருமைப்பாங்குகளை முன்னிட்

டேச் செல்வதைக் கைவிடுதலும் சரியன்று. பூர்வகாலத்துச் செய்யுட்போக்கான சிறந்த இலக்கியங்களின் சுபாவவன்மை நாட்டாருடைய விவேக விருத்திக்கு எவ்வளவு உபபலமாகிற தோ அவ்வளவு மதிப்புள்ளதாக விருக்கும் என்பது வாஸ் தவமே. நாகரீகமும் கல்வியும் மேன்மேலும் வளரவேண்டு மேயன்றிக் குட்டையில் தேங்கிய தண்ணீர்போல் ஓரே நிலை யில் தடைப்பட்டிருக்கக் கூடாது. விர்த்தியை நாடும்தே சத்தார் தமது பூர்வநிலைமையையும் மறக்கலாகாது. இப் பொழுது அந்நிய தேசத்தாருடன் நிகழும் சம்பந்தத்தையும் கைவிடலாகாது; ஆகையால் புதுவகை நாடகங்களைச் செய் வது அநுசிதமல்லவென்று தோன்றுகிறது. "பழையனக ழிதலும் புதியனபுகுதலும் வழுவல காலவகையினுனே" என்று பவணந்தியும் பகர்ந்திருக்கின்றனரே. ஆனால் அப்புது வகைநாடகம் காலவிளம்பத்தாலும் அசாதாரண கவிப்பிர தாபத்தாலுமே அன்றிச் சாதித்தல் சுலபமாகாது. அதுபரி யந்தம் சுதேசபண்டிதர்களையும், படிப்படியாய்ப் பொதுஜனங் களையும் மறுநாட்டு நாடகம் பழக்குவித்தற் பொருட்டு அர ங்கிற்கு பயோகமில்லை யெனினும் 'இழுக்குடைய பாட்டுக் கிசைநன்று,' என்னும் இளைப்பமான சரக்கைத் தேடாமல், வாசித்தல் ஆனந்தம் ஜனிக்கத்தக்கவாறு நவரசங்களையும் அமைத்து இயற்றமிழில் ஒருபிரிவாகவே நாடகங்களை இய ற்றிப் பிரசுரம் செய்யவேண்டியது. இது அந்நியபாஷைகளை நன்கறிந்த தமிழ் அபிமானிகளின் கடமையாக நிலைநிற்கத் தக்கதாம்.

### நவரஸங்களாவன.

(1) சிங்காரம், (2) வீரம், (3) பெருநகை, (4) கருணை, (5) ரௌத்திரம், (6) குர்ச்சை, (7) அற்புதம், (8) பயம், (9) சாந்தம், என்பவைகளாம். இவ்வொன்பது ரசங்களில் சிங்காரரசம் அன்புண்டாக வர்ணித்தலாம்.

(i) சிங்காரம் (இதற்கு யமுனாநதிவர்ணனை உதாரணமாகப் படித்தறியலாம்.)

"ஏகசக்கரநகரியில் பிரஹ்மசாரி வேஷம்பூண்டு வசித்துவந்த பாண்டவர்கள் சாயங்காலங்களில் திவ்விய ஜலமுள்ளவளாயும், இ நகரையிலும் நெருங்கிய வனதலாகுல்ம விருக்ஷங்களிலிருந்து காற்று வீசுங்காலத்தில் காம்புவிட்டு நழுவும் புஷ்பங்களினால் அலங்காரமுள்ளவளாயும், மத்ஸ்ய கச்சப திமிதிமிங்கலாதி ஜல ஜந்துக்களால் பூஷிதையாயும், சிவந்த தாமரஸபுஷ்பங்களால் கரசரணங்களை வஹித்தவள் போலும் நீலோத்பல புஷ்பங்களால் நேத்திரங்களுள்ளவள்போலும், மதுபானார்த்தம் பிரமிக்கும் பிரமரங்களென்னும் வண்டுகளால் கறுத்த கூந்தலை வஹித்தவள்போலும், தாமரஸ நீலோத்பல கல்ஹாராதி புஷ்பங்களுடைய பரிமளத்தை வஹித்துவீசும் மந்த மாருதமென்ற இளங்காற்றினால் பத்மினீஜாதிக்குசிதமான பத்மகந்த நிச்வாசத்தை வஹித்தவள் போலும், வெளுத்த தாமரஸங்களால் விசித்திர தவள முத்தாஹாரத்தை அடைந்தவள்போலும், சக்கிராகாரப்பிரமாணமுள்ள சுழிகளால் நாபிஸ்தானத்தை வஹித்தவள்போலும், சிறு அலைகளால் திரிவலி என்னும் மும்மடிப்பை அடைந்தவள் போலும், கனமான மணற்குன்றுகளால் மூன்தட்டுப் பின்தட்டை வஹித்தவள்போலும், நீர்த்திரை நுரைத்துச் செல்வதால் இடுப்பில் ரஜத மணிமேகலை தரித்தவள்போலும், தெளிந்த ஜலமாகிற லாவண்ணியம் பொருந்திப் திவ்யத்வனியுள்ள ஹம்ஸவரிசையாகிற கிங்கிணி கணகணத்காரமுள்ள பாதசரம் பொருந்தி ஜலத்தில் பரவிய தாமரஸபுஷ்ப பராகங்களாகிய பட்டுவஸ்திரத்தால் விளங்கிய சிங்கார நாயகிபோலும் விளங்கும் கங்காசகியாகிய யமுநாநதியைப்பார்த்து மகிழ்வார்கள்."

---

பல்லவி.

அந்தராம சௌந்தரியம் என்றால் அறிந்துசொல்லப்
போமா அம்மா.

அநுபல்லவி.

கந்தமேவும் அர விந்தமலரும் அவர்
காலுக்கு நிகர் ஆமோ கைக்குத்தான் சொல்லப்
[போமோ. (அந்த)

சரணம்.

அதிசயம் உடம்பளபளென் றிலகுகண்
ணாடிநிகர்த்தக போலமும்
மதிகள் ஒரு சத கோடிக்கு மேலான
மங்களமலர்முகக் கோலமும்
கதியென்றடுத்தவர்க்குப் பதியும்நிதியுந்தரும்
கருணாநயன வி சாலமும்
குதிகொள்ளும்பவள வாயும்சிறுநகையும்
குருமந்தகாச வி லோலமும்
புதுமலை யினில்விழும் பொன் அருவியைப்போலும்
பூமணி மார்பினில் புரளும்பப் புரிநூலும்
எதிர்இல்லாத கோ தண்டமும் ஒருக்காலும்
எழுத வேணுமென்றால் ஆமோ மன்மதனாலும் (அந்த)

2\. வீரரசம் என்றால் வீரத்தன்மையைச் சொல்வது. அதாவது: உத்ஸாகம் அல்லது மனவெழுச்சி; கோபமேகூடாது. (உ-ம்)

(1) வெண்பா.

இம்மென்னு முன்னே யெழுநூறு மெண்ணூறும்
அம்மென்றா லாயிரம்பாட் டாகாதா? சும்மா
இருந்தா லிருப்பே னெழுந்தேனே யானாற்
பெருந் தாரை மேகம் பிளாய்.

மூள்ள தருக்கள் பல உண்டு. அவற்றில் இதனடியில் வருவதை நீங்கள் கேட்டிருக்கலாம்.

ராமன் பஞ்சவடிதீரத்தில் இருக்கும்போது சூர்ப்பநகை வந்து வாதாடிச் சீதையை எடுத்துக்கொண்டுபோக யத்தனிக்கவே, இலக்ஷ்மணர் அவளுடைய துஷ்டத்தனத்துக்காக மூக்கையும் காதையும் அறுத்துவிட்டோட்டினார். அத்தருணத்தில் அவள்தன் சகோதரரான கரதூஷணர்களுடன் முறையிட, அவர்கள் ராமனோடு யுத்தம் செய்யவந்தார்கள். அப்பொழுது ராமன்காட்டிய வீரத்தன்மையை விளக்கும் தருவை இதன் அடியில் காண்க:—

(2) தரு, இராகம்-பந்துவராளி, அடதாளம்.

பல்லவி.

அடித்தானே ரகுராமன் - கோதண்டம்கை
பிடித்தானே ஜயராமன்.

அநுபல்லவி.

அடித்தானே ரகுராமன் முடுக்கான கரநாமன்
அனுப்பின பதினான்கு முனைத்தலை வரையாங்கு
அரக்கி கண் காட்டியே பொருக்கென மூட்டியே
அப்புறத் திலே ஒண்ட கைப்பிடித்த கோதண்ட
அய்யன் கை களில்வாரி எய்கின்ற சாமாரி
அதினால் உரைக்கரும் பதினால் அரக்கரும்
அலைகடல் போலெழத் தலைதலை யாய்விழ
ஆனைப் படைமுடிய சேனைக் கடல்வடிய (அடித்)

---

பெருநகை என்றால் விகாரமான வேஷபாஷைகளால் உண்டாகும் அதிகநகைப்பு, (உ.—ம்.)

(1) இராகம் - கமாஸ், தாளம் - ஆதி.

சோறு பச்சடி துவரம்பருப்பு குழம்பு
சாப்பிடலாம் சாப்பிடலாம் சம்பிரமமாகச் சாப்பி
டலாம் (சோறு)

இராகம் - நாதநாமக்கிரியை, தாளம் - ரூபகம்

பல்லவி.

கேக்கிறகுறிசொல்றேனம்மே-கேக்கிறகுறிசொல்றேனப்போ

அநுபல்லவி.

எக்கமறவாளும் எந்திளே நீங்கட்கு. (கேக்கிற)

சரணங்கள்.

நங்கக் குறக்கூட்ட நாச்சிக் கஞ்சிபனம்
நாலஞ்சி எத்திலெ பாக்கு வைச்சிச் சனம்
நீங்கள்ரு கட்டி களித்த பயஞ்சிலெ
நெனக்குத் தந்தாலே மனக் களிப்பாலே. (கேக்கிற)

மாலச்மி, அங்கம்மா, வெள்ளம்மா, பூவாடே
தருதயீரா, யீரபத்ரா, நீ, பாவாடே
ஆலச்யம் பண்ணுரே அல்லாரும் வாருங்கோ
ஆடுங்கோ சாம்பிராணி போடுங்கோ-அம்மேநீ (கேக்)

ரியேன் பாவகனுய்ப் பலதீமைகள் செய்து விட்டேன்
ரியே னுயினபின் பிறர்க்கேயுழைத் தேழை யானேன்
சேர் பூம்பொழிற் சூழ் கனமாமலை வேங்கடவா
யே வந்தடைந்தே னடியேனை யாட்கொண் டருளே.

கருணரசம் அல்லது சோகரசம் என்றால் விரும்பினது
ட்டாமையாலும் வெறுப்பு நேர்ந்தமையாலும் உண்டாகும்

ஸைத்தாபமாகும்,

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

ஹிக்கவே அவள் அதிக துக்கம் மேலிட்டுச் சபையாரைப் பார்த்து முறையிட்டுப் புலம்பினாள்.

விருத்தம்.

பெரியோ ரிலையோ பெண்களையும்
பெற்றோ ரிலையோ! மானமுள்ள
உரியோரிலையோ என்றனுக்கிங்
கொருதிக் கிலையோ! நீதிசொல்ல
அரியோ ரிலையோ ஒருவருக்கு
மருளே யிலையோ! யாதென்றுந்
தெரியா வேழை யென்பங்கில்
தெய்வ மிலையோ! ஓவிதியே

சதுந்தலைசொல் கண்ணிகள்,

நரு, இராகம் காம்போதி, தாளம் ஆதி.

அவனி தனிலொருவர் அக்கிரமம் செய்தாரானால்
அரசர் தண்டிப்பதுண்டு — தெய்வமே
அரசர்களே யிப்படி அனியாயஞ் செய்தாரானால்
ஆருடன் சொல்லுவேன் — தெய்வமே
மிதித்த கொம்பும் முறிந்து பிடித்த கொம்பும் ஒடிந்து
விழுந்தவர் போலானேன் — தெய்வமே
[illegible]ன் சொன்னவார்த்தையை நம்பின எனக்கிந்த
[illegible]வரு மென்றறியேன் — தெய்வமே
[illegible] பயிரில்மாடு விட்டு மேய்ந்ததானால்
வேலி யிடுவாருண்டு — தெய்வமே
வேலி தானேயிட்ட பயிரை மேய்ந்ததானல்
வேறென்ன செய்வது — தெய்வமே

---

இரௌத்திரம் என்பது கோபித்துக்கூறுவது. (உ-ம்)

சித்திரகூடத்தில் லட்சுமணர் பரதர் சேனையைக் கண்டு கோபித்தல்.

## தரு, இராகம் - ஆசாவேரி, தாளம் - ஆதி.

பல்லவி.

ஒருமொழிமாத்திரம்தாரும் சாமி - எனக்குத்தரம்
ஒருமொழிமாத்திரம்தாரும் சாமி.

அநுபல்லவி.

பரதன் சேனை இது நான்மரம் எயிப்
பாரக்கத்தெரிந்த தையாபழி காரி
வரவிடுக்கவர் தான்நம்மைச் சீறி
வரட்டும் ஒருகை பார்க்கிறேன் எனத் தேறி. (ஒரு)

சரணங்கள்.

வஞ்சகன் பரதன்செய்த கோரம்-தீர்த்தால் அல்லாமல்
வாங்குமோ எனதுவங்கை வாரம்-தேவரீர் இந்த
வஞ்சியும் நீரும்போய்ச்சற்றே தூரம்-இருப்பீர் இந்த
மட்டுமே செய்திடும்உப காரம்
கொஞ்ச நேரத்திலே என்சிலை பூட்டி
குறைக்கும் நரிக்கும்இரை ஆகவே காட்டி
பிஞ்சிடாமல் இந்தச் சேனையைக் கூட்டி
பிரளயகாலருத் திரனைப்போல் மாட்டி
நஞ்சுநஞ்சுபஞ்சு பஞ்சாய் எவர்களும்
நெஞ்சிரங்கவெஞ் சரங்களைத் தொடுக்கிறேன்(ஒரு)

---

6 தர்க்கை என்றால் ஒருபொருளைக்கண்டு அருவருத்துக் கூறுவது. (உ - ம்)

(1) வெண்பா.

கரிக்காய் பொரித்தாள் கன்னிக்கா யைத்தீர்த்தாள்
பரிக்காயைப் பச்சடியாய் பண்ணினாள் - உருக்கமுள்ள
அப்பக்காய் நெய்துவட்ட லாக்கினாள் அத்தைமகள்
உப்புக்காண் சீசீ யுமி.

கரிக்காய்=அத்திக்காய்; பரிக்காய்=மாங்காய்;
கன்னிக்காய்=வாழைக்காய்; அப்பக்காய்=வெள்ளரிக்காய்;

இக்காய்களைச் சமைத்துப் பரிமாறியபோது ஔவை உண்டு உப்பு அதிகரித்ததினால் சீ-சீ என்று அருவருத்துக்கூறியது.

இராமநாடகத்தில் இதற்கு உதாரணமாக ஒரு தருவும உண்டு.

(2) இராகம் - பந்துவராளி, தாளம் - ஆதி.

பல்லவி.

தூங்கினான் தூங்கினானே - கும்பகருணன்
தூங்கினான் தூங்கினானே.

அநுபல்லவி.

ஆங்கினான் ராவணன் ஏவல் தாங்கிய நாலுகிங்கரர்
வாங்கிஇருப் புலக்கைகொண் டோங்கி அடிக்க அடிக்கத் ( )

சரணம்.

தாக்கிய பூரிபேரிகை கூக்குரலெல் லாஞ்செவியில்
சற்றும்ஏ றாமல் விடுக்க - தளம்தளமாய்
மேற்கொளும் யானைசேனைகள் மார்க்குளும் தோளிலுமேறி
மிதித்து மிதித்து முடுக்கத் - தணலிற்காச்சிப்
போக்கிய உலக்கைகளால் மூக்குமயிர் வெந்திலங்கா
புரியெங்கும் நாற்ற மெடுக்க - பலவிதமாய்
ஆக்கியவே தனைகள் சிலாக்கியமாக மேன்மேலும்
அதிக நித்திரை கொடுக்க - சுரணைகெட்டுத் (தூங்கி)

---

(7) அற்புதம் என்றால் ஒரு புதுமையான பொருளைக்கண்டு ஆச்சரியப்படுதல. (உ - ம்)

(கும்பகோணத்து சேஷம்மாள் பாட்டு.)

பல்லவி.

பேதையே நானென்னசொல்லுவேன் - அதிசயத்தைப்
பேதையே நானென்னசொல்லுவேன்.

சரணங்கள்.

தட்டாரப் பூச்சிபறந்து
பொட்டென உயரச்சென்று

கிட்டிமுட்டி ஆகாயத்தை
எட்டிப்பிடிப் பேன் என்றதாம். (பேதை)
மசகம்தன் சக்திகொண்டு
மாமேரு மலையைக்கண்டு
விசையோடாறு கைகள்கொண்டு
அசக்கிவிடுவே னென்றதாம். (பேதை)



(8) பயம் என்றால் ஒருபொருளைக்கண்டு பயந்துகூறுதல். (உ-ம்) இராமநாடகத்தில் - மூலபலத்தைக்கண்டு சாம்புவான் முதலான வானரவீரர்கள் பயந்து ஓடத்தொடங்கியபோது அங்கதனைப் பார்த்துச் சொல்வது.

தரு, இராகம் - புன்னாகவராளி அடதாளம்.

பல்லவி.

எங்களால் ஆகாதையா - மூலபலத்தின்
எதிர்நிற்கப் போகாதையா.

அநுபல்லவி.

அங்கதா உன்தர்மம் எங்கள்பேலையோ வர்மம்
அரக்கர்க் கெங்களைக் கொடுக்கத் துடிக்கிறாய்
அகதியைப் பிடித்துப் பகுதிக் கடைக்கிறாய். (எங்க)

சரணம்.

வினைக்குள் இந்திர சித்தம்பால் பட்ட புண்கள்ஆறி
வேறேரத்தம் இன்னம் ஊறவும் இலையே
அனர்த்தகாலம் போல்கக்கு கரைகாணாச் சேனைமேல்
அஞ்சாது அழைக்கிறாய் பெரிதவர் நிலையே
பனித்தபஞ் சினில்பாயும் கனல்போ லெங்களை அவர்
பாய்ந்துகொல் வாரென்று ராய்ந்து பார்க்கிலையே
கனத்த கும்பகர்ணனைத் தின்பான் ஒரு
அரக்கன் பொரிக்கறி போலும்

கணிதம் இவர்களுக் குண்டோ பெருங்கடல்
மணலையே யெண்ணி னாலும்
உனக்கென்னசிறு பிள்ளையாலோ
சனைக்குந் தெரியுமோ நாலும்
ஓட்டிப்பாவையும் இட்டுத்தலை தொட்டன்
உயிர்க்குப் பிணைநீசொன் னாலும். (எங்க)

(9) சாந்தம் என்றால் காமக்குரோதாதிகளை அடக்கல், அல்லது ஒருவர்செய்த தீச்செயல்களைப் பொறுத்தல். (உ-ம்) ஸ்ரீராமன் வனம்போகச்சம்மதித்துக் கைகேசியின் விடைபெறுதல்.

ருஎ, இராகம் - சுருட்டி, தாளம் - திரிபுடை.

பல்லவி.

என்பாக்கியமே பாக்கியம் எவர்க்குண்டிந்த லாக்கியம்.

அநுபல்லவி.

அன்பாக வனம்போக அநுக்கிரகஞ் செய்தாயே. (என்)

சரணம்.

ஒருபிள்ளை ராமன்பர லோகசா தகம்செய்ய
ஒருபிள்ளை பரதன் இந்த வுலகந் தன்னை ஆள
இருபிள்ளையாலுங்கைகை இகபரம் பெற்றாள் என்ன
வருசொல்லுண் டாச்சுதென்ன மா தவஞ் செய்தேனோ. ()

நவரசங்களாவன:—சுதேசபாஷாபி மானிகளுக்கு இன்னுமொரு விஷயத்தை நினைப்பூட்டத் துணிகிறேன். ஒவ்வொரு பாஷையிலுங் காண்கிற பற்பலவாக்கிய நடையும் வெவ்வேறு சுவைகளும் அந்த அந்தக்காலத்தில் ஜீவித்தவர்களின் வாழ்க்கையில் மாறிவரும் ஒழுக்கத்தையும் கருத்துக்களையும் பொறுத்தன வாகவே யிருக்கின்றன. சரித்திரத்தை மறந்துபோகாமல் நிலைநிறுத்து தற்குக் கர்ணபரம்பரையாக ஒருவரிடமிருந்தொருவர் கேட்டுக்கொள்ளுதலும், விநோதப்பொழுது போக்குக்கு மனப்பாடப்பண்ணி ஒப்புவித்தலுமே போதுமானவையென்று மனிதர் எண்ணியிருந்த

காலங்களில் ஒவ்வொரு விஷயமும் ஞாபகத்தினிற்க மோனை யெதுகையோடு பிராசங்களில் அமைத்துச் செய்யப்படுஞ் செய்யுள் நடையே இன்றியமையாத தெனவும் அதுவே சொல்வோர் மனத்துக்கும் கேட்போர் செவிக்கும் இன்பம் பயக்கத்தக்கதெனவும் அக்காலத்தவர் எண்ணியிருந்தனர். பிறகு புத்தகங்கள் யாவும் ஏட்டுப் பிரதிகளாகவும், எழுதுதலும் மெதுவாயு மிருந்த கஷ்டத்தோடு செய்யக்கூடியதாகவும் இருந்தகாலத்தில் ஸரஸ்வதி பண்டாரமென்னும் புத்தகசாலைகள் மடாதிபதிகளால் ஆதரிக்கப்பட்டு மடங்களிலேயே நிலைபெற்றிருந்தன; அதனாலேதான் அப்புத்தக சாலைகள் நாட்டுக்கலகம் நேரிட்ட காலங்களிலும் அங்கே பத்திரமாயிருந்தன. சத்துரு பயத்தால் சாதுக்களும் மெலியாரும் செய்வதொன்றின்றி அவ்விடங்களிலே தான் அடைக்கலம் புகுந்தனர்.

அம்மடங்களில் மதச்சார்பும் ஏகாந்த நிஷ்டையும் நூல்கள் எழுதுவதற்கு விசேஷமான சாவகாசமுமிருக்கும்படி செய்தன போலும். ஆதலால் அவர்கள் ஸ்தலபுரான மியங்களையும், தீர்த்தப் பிரபாவங்களையும், மூர்த்தி விசேஷங்களையும், பேறுபெற்ற பக்தர்களின் சரித்திரங்களையும், அதிஜாக்கிரதையோடும் பொறுமையோடும் விரிதது எழுதுவாராயினர். அத்தன்மையராக விரித்துரைத்த வைராக்ய சிரோமணிகளிடத்தில் சிங்காரக் கதைகளையும், விநோத சரித்திரங்களையும், நாடகங்களையும், யுத்த சரித்திரங்களையும், தேசயாத்திரை சமுத்திர யாத்திரையைப் பற்றிய வரலாறுகளையும் நாம் எவ்வாறு காணுதல்கூடும்?

அச்சுயந்திரங்கண்டு பிடிக்கப்பட்டதோடுகூடவே நூல் எழுதல் என்னும் தொழிலும் உண்டாயிற்றென்று சொல்லத் தடையில்லை. உணவுதேடுஞ் சக்தியமைந்ததோடு பசியும் சேர்ந்தது. நாட்டாருந்தமது விருப்பங்களைப் பூர்த்திசெய்து கொள்ளத் தொடங்கினர். ஐம்பது வருஷங்களுக்குமுன்

ஏககாலத்தில் ஸ்தாபித்த வித்தியசாலைகள் விருத்தியடைய வே புஸ்தகங்கள் வேண்டுமென்னும் விருப்பமும் அதிகரித் தது. அப்போழுதே வித்யார்த்திகள் புஸ்தகங்களைத் தாமே படித்து விஷயங்களைத் தாமே ஆராய்ச்சிசெய்யவேண்டு மென்னும் எண்ணத்தையும் அவாவையும் உடையவராயினர். அப்பொழுதே முதலில் அச்சிட்டுப் பிரசுரம் செய்யப்பட்ட புத்தகங்கள், பாவலர்களையும் நாடகக் கவிகளையும் பிரபந் தங்கள் வியாசங்கள் எழுதவல்ல சதுரப்பாடுடையவர்களை யும், பத்திராதிபர்களையும் முன்னுக்குவரச் செய்தன. வகை ப்பாத்திரங்களும், உபதேசபத்திரங்களும், கடிதங்களும், லகு லேகங்களும் முற்காலத்தில் இருந்தனவோ? அவைகளை முன்னுக்கு வரும்படிபண்ணி நாடெங்கும் பாவச்செய்கின்ற இக்காலத்தில், பூர்வத்தில் தமிழ்ப்பாஷையில் இருந்தன வென்று ஊகித்தறியப்படும் நாடகத்தமிழ்க்காவியங்களை இக் காலத்துக்குத் தக்ககோலத்துடன் பேருருக்கேற்ற இந் தத்தமிழ்நாட்டுப் பரிபாஷைகளும் சொற்சுவை பொருட் சுவையும்நிரம்பி அலங்காரங்களமைந்து சொற்சுருங்கிப் பொ ருள் நிறைந்து ரசமாக இருக்கும்படிச் செய்யும் வண்மையை நாம் ஏன் தேடாமலிருக்கவேண்டும்.

இந்த ஒன்பது ரசங்களில் சந்தோஷம் என்பதை எதில் சேர்க்கிறதென்று சிலர் கேட்டு இதனடியில் வரும் ராமநாட கத்திலே ராமன் பரத்துவாஜாச்ரமத்திலே அனுமாரைப்பார் த்து சொன்ன பாட்டைச் சுட்டிக்காட்டலாம்:—

தரு - மோகனராகம் - ஆதிதாளம்

பல்லவி.

வாவா அனுமானே என்னுடனுண்ண வாவா சீமானே.

அனுபல்லவி.

சிலமயம் இல்லாமல் பரதனையும் தேற
தேற்றி எனக்குவந்து சொன்ன வுன்னைப்பாரு

எக்காலமு மென்தா ஆசை ...யன்காரியத்தில்
எங்கெங்கும் போய்ச்சுற்றி ... வந்தாயே.
அக்கிரமம் நீசெய்து வருகையாலே நாங்கள்
விருந்த முதிருந்துண்ணத் தந்தாயே
சர்க்கரைப்பந்தலிலே தேனமாரி பொழிந்தது போல்
ஸந்தோஷவார்த்தைகொண்டு ஸமயத்தில் வந்தாயே
வாவா ... என்னுடன் ... வாவா சீமானே

இதைப்பற்றி ஆராய்ந்து பார்க்கையில் இந்தப்பாட்டின் விஷயம் வெளிப்படையா யிருப்பதனாலும் போலவென்று பின்பு வந்திருப்பதனாலும் உவமாலங்காரத்தில் அடங்கு மென்று தோன்றுகிறது. இதுநவரசங்களில் சேரமாட்டாது.

இவ்வாறு நவரசங்களுக்கும் அலங்காரங்களுக்கும் உள்ளவித்தியாசங்களை நுட்பமாக அறிந்துகொண்டால்தான் இரசங்களைக் குறிப்பிட்டுப் பிரசங்கிக்கலாம். இத்தன்மையான பிரசங்கம் பொன்னால் செய்தமலருக்கு மணமூட்டினது போலக்கேட்டவர் யாவரும் வியக்கதக்கதாயிருக்கும்.

முத்தமிழின் பெருமைபற்றிச் சம்பாஷிக்கும் போது மாணிக்கமாலைக்கு மென்மையில்லை, பொன்மாலைக்கு வாசனையில்லை பூமாலைக்கு வாடுதலென்ற குறையுண்டு; இந்த மூன்றுவகைக் குற்றமில்லாத முத்தமிழை ... ஒரு மூன்றுநிமிஷத்தில் முத்தமிழ் மலர்மாலை இதோ ஸரஸ்வதிக்குச்சமர்ப்பித்தேன் என்று ஒருகவி ... கட்டளைக் கலித்துறையை இதனடியில் சேர்த்து ... தச்சிறு வியாசத்தை முடித்தேன்.

" மாணிக்கக் கோவையின் மென்மையில்லாக்குறை மாற்றுயர்ந்த
ஆணிப்பொன் னாரத்தில் வாசமில்லாக்குறை யம்மலர்த்தார்
பேணிற்குறையது வாடுதலா மிவை யேதுமின்றி
வாணிக்கு முத்தமிழ்மாலையையின்று ...தனனே "

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| III Editor's No | 11 | Ext..ordinary | Extraordinary |
| 3 | 6 | லாது | லாகாது |
| 10 | 21 | கண்டோ | கண்டோர் |
| 11 | 10 | காமுருவர் | காமுறுவர் |
| 24 | 27 | கொடை | கோடை |
| 25 | 13 | Gitri | Gita |
| 42 | [illegible] | கண்ணிணை | கண்ணிணை |
| 108 | 3[illegible] | தாணியறு | தாணியறு |
| 136 | 10 | ..ந்தரும் | வேந்தராம் |
| ,, | 18 | எ..ணிதவாம் | எண்ணிலவ.. |
| ,, | 25 | வெண்டிங்கன் | வெண்டிங்கள் |
| 138 | 11 | யாய்விவு | யாய்வினை |